## VII. GOVERNMENT MOTION.

### OFFICIAL LANGUAGE POLICY.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move—

"That the policy of the Madras Government on the Official Language be taken into consideration."

சபாநாயகர் அவர்களே, இந்த மொழிப் பிரச்னையைப்பற்றி இங்கு விவாதிக்க வேண்டிய அவசியமிருக்கிறது என்பதுபற்றி நான் வலியுறுத்தவேண்டிய அவசியமில்லை. நாளைய தினம் நாம் மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தைப்பற்றி விவாதிக்கப் போகிறோம். இப்பொழுது இருக்கக்கூடிய இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டமாக இருந்தாலும் சரி, அல்லது நாம் ஏற்றுக்கொள்ள இருக்கும் மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டமாக இருந்தாலும் சரி நாட்டில் நல்லதொரு சூழ்நிலை இல்லாதிருக்குமானல் இந்தத் திட்டங்களை எல்லாம் நிறைவேற்றுவது மிகவும் கஷ்டமாக இருக்கும். கஷ்டமாக இருப்பது மட்டுமல்ல. பல தடைகளும் அவ்வப்போது தோன்றிக் கொண்டிருக்கும் என்பதில் சந்தேகமில்லை. ஆகவே, நல்லதொரு சூழ்நிலை ஏற்படுத்த வேண்டியது இந்த சபையின் கடமை, என்பதை நாம் என்றைக்கும் ஏற்றுக்கொண்டிருக்கிறோம். அதற்கு ஒரு வழி காட்டக்கூடிய முறையிலே சென்ற காலங்களில் நாம் பணியாற்றியிருக்கிறோம் என்பதுபற்றி ஓரளவு பெருமைப்பட்டுக்கொள்ளவும் முடியும் என்று நான் இந்த சபையின் சார்பாக சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். மொழி வெகு சுலபமாக மக்களின் உணர்ச்சியை தட்டி எழுப்பிவிட முடியும் என்பதற்கு சான்ருக பல நிகழ்ச்சிகள் நம் நாட்டில் நடந்திருக்கின்றன. மக்களை ஒன்று படுத்தக்கூடிய சக்தியை மொழி பெற்றிருக்கிறது ; அதே சமயத்தில் மொழி காரணமாக பல்வேறு குழப்பமான நிலைமைகள், மக்களை பிரிவு படுத்தக்கூடிய கட்டங்கள் ஏற்பட முடியும் என்பது நம் எல்லோருக்கும் நன்கு தெரிந்த விஷயம். அதன் காரணத்திஞல்தான் இன்று நல்ல தொரு சூழ்நிலையை ஏற்படுத்துவதற்குள்ள அவசியம் ஏற்பட்டிருக்கக் கூடிய இந்தக் காலத்தில் இந்த மொழிப் பிரச்னைக்கு நாம் ஒரு வழி காண வேண்டியது மிகவும் அவசியம் என்பதைத்தான் மறுமுறையும் நான் இந்த சபை முன் சமர்ப்பிக்க விரும்புகிறேன். இந்த மொழிப் பிரச்னையைப் பொறுத்த வரையில் நாம் ஏதோ புதிதாக எடுத்து விவாதிக்க கூடிய விஷயமல்ல. இதற்கு முன்பே விவாதித்து சில முடிவுகளையும் நாம் ஏற்றுக்கொண்டிருக்கிறோம். அந்தப் பிரச்னை வந்த காலத்திலெல் லாம், அது ஏதோ காங்கிரஸ் கட்சியின் தனிப் பிரச்னை என்ற அடிப் படையில் அணுகாமல் இந்த சபையிலுள்ள எல்லா எதிர்கட்சித் தலைவர் களையும், கட்சிப் பிரதிநிதிகளையும் கூட்டி வைத்து இதை பரிசீலனை செய்து ஏகோபித்த ஒரு அடிப்படையில்தான் முடிவுகள் அவ்வப்போது எடுத்து அந்த முடிவுகளின் அடிப்படையில் சர்க்கார் நடவடிக்கைகள் எடுத்து வந்திருக்கிருர்கள். ஏகோபித்த முடிவு என்று நான் சொல்லும்போது, இதை எல்லோரும் அவரவர்கள் அபிப்பிராயத்திற்கு ஏற்ற பிரகாரம் முடிவு செய்யப்பட்டு, எல்லோருடைய அபிப்பிராயத்திற்கும் ஏற்றபடி முடிவு செய்யப்பட்டது என்று நான் சொல்வதற்கு தயாராயில்லை. ஒவ் வொருவருக்கும் பல்வேறுபட்ட கருத்துக்கள் மொழிப் பிரச்னைபற்றி இருக் கின்றன.

ஒவ்வொருவரும் தங்களுடைய கருத்துதான் சரி என்று சொல்லிக்கொண்டேயிருப்போமானல், ஏகோபித்த கருத்துக்கு வருவது என்பது முடியாத காரியம். ஆகையினல் எல்லோரும் சேர்ந்து ஏகோ பித்த ஒரு முடிவு எடுக்க வேண்டுமென்று சொல்லும்போது—ஒருவருக் கொருவர் நாட்டினுடைய நன்மைக்காக கொஞ்சம் விட்டுக்கொடுத்து அதன் மூலமாக ஏகோபித்த ஒரு முடிவை எடுக்கவேண்டும் என்று நாம் நினைக்கும்போது—ஒவ்வொருவரும் தங்களுடைய கருத்தையே

5th September 1960] [Sri C. Subramaniam]

வலியுறுத்திக் கொண்டிருப்பார்களேயானால் ஏகோபித்த முடிவுக்கு வருவது கொஞ்சம் சிரமமாக இருக்கும். ஆகவே எந்த கருத்தை ஏற்றுக்கொள்ளலாம் என்று முடிவு செய்கின்ற பொழுது, பொதுவான ஒரு கருத்தைத்தான் ஒத்துக்கொள்ள வேண்டுமே தவிர, ஒவ்வொருவரும் தங்களுடைய கருத்துத்தான் சரி, இதிலே எல்லாம் அடங்கிவிட்டது என்று சொல்வதை நாம் எப்போதும் ஏற்றுக்கொள்ளவில்லை. நாம் எல்லோரும் ஒன்று சேர்ந்து ஏகோபித்த ஒரு முடிவு எடுப்போமேயானால் அதை நாம் மற்றவர்களுக்கு சொல்லும்போது அவர்களும் அதை ஒப்புக்கொள்ளக் கூடிய முறையில் இருக்கும் என்கின்ற முறையில்தான் இந்த விவாதம் இந்த சட்டசபையில் நடந்து ஒரு முடிவுக்கு வந்து அந்த சிபாரிசை பார்லிமெண்ட் கமிட்டிக்கும் பார்லிமெண்ட் அங்கத்தினர்களுக்கும் தெரிவித்தோம்.

ஆகவே இப்போது நாம் மொழிப் பிரச்னையைப்பற்றி விவாதிக்கும் போது நாம் எடுத்துக்கொண்ட முடிவுகள் என்ன என்பதைப்பற்றி, ஞாபகப்படுத்திக்கொள்வதற்காக அவைகளை சுருக்கமாக விவரிக்க விரும்புகிறேன். இந்த மொழிப் பிரச்னை முதன் முதலாக லாங்க்வேஜ் கமிஷன் நியமிக்கப்பட்டபொழுது நம்முடைய கவனத்திற்கு வரவேண்டிய அவசியம் ஏற்பட்டது. லாங்க்வேஜ் கமிஷன் முன்னால் நாம் எந்த முறையில் அவர்களுக்கு நம்முடைய கருத்துக்களை தெரிவிக்க வேண்டும் என்பதைப்பற்றி ஆலோசித்தபொழுது, தனித்தனியாக அவரவர் கருத்துக்களை தெரிவிப்பதைவிட எல்லோரும் சேர்ந்து ஏகோபித்த ஒரு கருத்தை தெரிவித்தால் அது நல்ல சக்தியுள்ளதாகவும், நல்ல பலனுள்ளதாகவும் இருக்கும் என்ற அடிப்படையில் எல்லாக் கட்சி அங்கத்தினர்களையும் கூப்பிட்டு வைத்து இதைப்பற்றி பரிசீலனை செய்து அதன் பிற்பாடு, ஒரு யதாஸ்தை—மெமோராண்டத்திற்கு சரியான தமிழ் என்ன வென்று தெரியவில்லை, அறிக்கை என்று வேண்டுமானால் சொல்லலாம். (ஸ்ரீ எம். கல்யாணசுந்தரம்: மெமோராண்டம் என்றே சொல்லலாம்)—ஒரு மெமோராண்டத்தை லாங்க்வேஜ் கமிஷனுக்கு சமர்ப்பித்தோம். அதில் ஒரு துரதிருஷ்டம் என்னவென்றால் லாங்க்வேஜ் கமிஷன் நாம் கொடுத்த பல்வேறு சிபாரிசுகளையும் ஒப்புக்கொள்ளவில்லை. ஒப்புக் கொள்ளாதது மட்டுமல்ல, நம்முடைய சிபாரிசுகளுக்கு முரண்பாடான பல சிபாரிசுகளையும் அவர்கள் செய்தார்கள். இதன் காரணமாக இன்னொரு குழப்பமான நிலைமையும் ஏற்பட ஏதுவாக இருந்தது. அந்த குழப்பமான நிலைமையை தவிர்ப்பதற்கு என்னென்ன நடவடிக்கைகள் எடுக்க வேண்டும் என்று ஆலோசனை செய்துகொண்டிருந்த பொழுதுதான் இந்த லாங்க்வேஜ் கமிஷன் செய்த சிபாரிசுகளை பரிசீலனை செய்வதற்கு என்று பார்லிமெண்ட் கமிட்டி ஒன்று நியமிக்கப்பட்டது. இந்த பார்லிமெண்ட் கமிட்டி நியமிக்கப்பட்ட பின்னால் மறுபடியும் எல்லாக் கட்சித் தலைவர்களையும், எல்லா பிரதிநிதிகளையும் அழைத்து இதைப்பற்றி பரிசீலனை செய்தோம். மறுபடியும் ஒவ்வொன்றாக பரிசீலனை செய்து ஏகோபித்த ஒரு கருத்தை தெரிவிக்கக் கூடிய முறையில் இருந்தால்தான், லாங்க்வேஜ் கமிஷன் செய்திருக்கக்கூடிய சிபாரிசுகளையும் மீறி நமது புதிய முடிவுகள் ஏற்றுக் கொள்ளப்படும்படியான பலன் ஏற்படும் என்கின்ற முறையில் நாம் இரண்டாவது தடவை யோசனைகளை அல்லது கருத்துக்களை தெரிவிக்க வேண்டியிருந்தது. அப்போதும் நம்மிடையில் பலருக்கு உறுதியான கருத்துக்கள் இருந்தபோதிலும்கூட, நம்முடைய நாட்டினுடைய நன்மையைக் கருதி, ஒவ்வொருவரும் தங்களுக்கு என்றிருந்த கருத்துக்களை எல்லாம் ஒதுக்கிவைத்துவிட்டு ஏகோபித்து சில கருத்துக்களை தெரிவித்து அதன் பேரில் நடவடிக்கை எடுக்கலாம் என்றும் அதன் அடிப்படையில் அந்த முடிவுகளை பார்லிமெண்ட் கமிட்டிக்கு சமர்ப்பிக்கலாம் என்றும் ஏற்பாடு செய்தோம். அதையும் கனம் அங்கத்தினர்களுடைய கவனத்திற்கு கொண்டு வர விரும்புகிறேன். நல்ல வேளையாக பார்லிமெண்ட் கமிட்டி இந்தச் சிக்கல்களை எல்லாம் நன்றாக உணர்ந்து நாம் கொடுத்த மெமோராண்டங்களை நன்றாக பரிசீலனை செய்தது. அது மட்டுமல்ல, அதிலுள்ள அங்கத்தினர்கள்கூட சொன்னார்கள், சென்னை சர்க்கார் என்ன கருத்து தெரிவித்திருக்கிறது என்பதை எடுத்துவைத்துக்

[Sri C. Subramaniam] [5th September 1960

கொண்டுதான் மற்ற எல்லா விஷயங்களையும்பற்றி ஆலோசித்தார்கள் என்று. அந்த விதத்தில்தான் பல முடிவுகள் எடுக்கப்பட்டிருப்பதையும் நாம் பார்க்கின்றோம். பார்லிமெண்ட் கமிட்டியில் நம்முடைய பலத்தை காப்பாற்றக்கூடிய வகையில் நம்முடைய அங்கத்தினர்கள் பலரும் நல்ல பணியாற்றியிருக்கிறார்கள். டாக்டர் ராமசாமி முதலியார் அவர்கள், இன்னும் இரண்டு மூன்று தென்னிந்திய அங்கத்தினர்கள் எல்லோரும் நம்முடைய கருத்துக்களுக்கு ஆதரவு கொடுத்து அதை ஒப்புக்கொள்வதற்காக அந்தக் கமிட்டியில் அரும்பாடு பட்டிருக்கிறார்கள். இவ்விதம் தென் இந்தியாவிலிருந்து அங்கத்தினர்களாயிருந்தவர்கள் அத்தனை பேருக்கும் முதன் முதலாக நாம் நன்றி செலுத்த கடமைப்பட்டிருக்கிறோம். (திரு. எம். கல்யாணசுந்தரம் : வடக்கேயுள்ள அங்கத்தினர்கள் சிலரும் நமக்கு ஆதரவு தந்திருக்கிறார்கள்) ஆம். திரு. கல்யாணசுந்தரம் அவர்கள் ஞாபகப்படுத்தியது போல் வடக்கேயுள்ள அங்கத்தினர்களுக்குத்தான் நாம் முதலில் நன்றி செலுத்த வேண்டும். வடக்கேயுள்ள அங்கத்தினர்கள் பலரும் நம்முடைய கருத்துக்களை வலியுறுத்தி, அதற்காக பாடுபட்டிருக்கிறார்கள். அவர்களுக்கு நாம் முதலில் நன்றியை செலுத்திக்கொண்டு பின்னால் நம்முடைய பகுதியிலிருந்து பணியாற்றிய அங்கத்தினர்களுக்கும் நமது நன்றியை செலுத்திக்கொள்ள விரும்புகிறேன். அதிலும் முக்கியமாக நமது அங்கத்தினர்கள் எல்லோரும் எந்த விதமான குறிப்பும் இல்லாமல் பார்லிமெண்ட் கமிட்டி ஒப்புக்கொண்ட சிபாரிசுகளில் கையெழுத்துப் போடக்கூடிய நிலைமை ஏற்பட்டது என்பதை நாம் மனதில் வைத்துக்கொள்ள வேண்டும். வேறு சிலர் எதிர்க் குறிப்புக்கள் கொடுத்திருக்கிறார்கள். அவர்கள் எல்லாம் இந்தியை ஆதரிக்கக்கூடியவர்கள். இந்த சிபாரிசுகள் எல்லாம் மிகவும் மோசமானவை, இந்தி மொழிக்கு இந்த சிபாரிசுகள் எல்லாம் ஆதரவு தரக்கூடியவை அல்ல என்றெல்லாம் எதிர்க் குறிப்பு கொடுத்திருக்கிறார்கள். அது ஒருபுறமிருக்க, நமது கோரிக்கையை பார்லிமெண்ட் கமிட்டியும் ஒப்புக்கொண்டது என்பதையும் பார்க்கின்றோம். இதற்கு பிற்பாடு இந்தப் பிரச்னை பார்லிமெண்ட் முன்பு விவாதத்திற்கு வந்தது. அப்படி விவாதத்திற்கு வந்தபொழுது பார்லிமெண்ட் கமிட்டி சிபாரிசு செய்தது மட்டுமல்ல அதற்கு மேல் ஒரு படி சென்று நமது பிரதம மந்திரி அவர்கள் இந்தி பேசாத மக்களுடைய அவநம்பிக்கையை போக்குகின்ற முறையில், சந்தேகங்களை போக்குகின்ற முறையில் எல்லோரும் ஒப்புக்கொள்ளக்கூடிய முறையில் பல உறுதி மொழிகளை தந்திருக்கிறார்கள். பார்லிமெண்ட் பேச்சு மட்டுமல்ல, மற்ற இடங்களிலும் அவர்கள் பேசியிருக்கக்கூடியதும் இதை பலப்படுத்தக்கூடியதாக இருக்கிறது என்பதை நான் வலியுறுத்திக் கூற விரும்புகிறேன். அவர்கள் கொடுத்திருக்கக்கூடிய பல்வேறு உறுதி மொழிகளையும் நாம் மனதில் வைத்துக்கொள்ள வேண்டும். ஏதோ ஒரு கருத்தை மட்டும் எடுத்து வைத்துக்கொண்டு பார்க்காமல், பொதுவாக அவர்கள் கொடுத்திருக்கக்கூடிய உறுதிமொழிகளை அடிப்படையாக வைத்துக்கொண்டு அதன் பேரில்தான் நாம் நடவடிக்கை எடுக்க வேண்டும் என்கின்ற காரணத்தினால் தான் நான் இதை வலியுறுத்த விரும்புகிறேன்.

அதற்கடுத்தபடியாக, இவை எல்லாவற்றையும் பரிசீலனை செய்த பிற்பாடு, நம்முடைய ஜனாதிபதி அவர்கள் அரசியல் அமைப்பு விதி 344-ன் கீழ் ஒரு உத்தரவை பிறப்பித்திருக்கிறார்கள். அந்த உத்தரவில் இருக்கக்கூடிய வாசகம் சிலருக்கு சந்தேகம் கொடுக்கக்கூடிய ரீதியில் இருந்தது என்று இன்றைக்கு விளங்குகின்றது. இதிலே ஏதோ பிரதம மந்திரி அவர்கள் கொடுத்த வாக்குறுதிகளை மீறி, இவைகள் எல்லாம் அமுலுக்கு வராத முறையில் இந்த 344-வது விதியின்கீழ் உத்தரவு போடப்பட்டிருக்கின்றதோ என்று பலருக்கு சந்தேகம்.

**(Deputy Speaker in the Chair.)**

11-00 a.m.

அதன் காரணமாகத்தான் திராவிட முன்னேற்றக் கழகத்தினர் " இது மாதிரி கொடுத்த வாக்குறுதிகளை மீறி ஜனாதிபதியினுடைய உத்தரவு அமைந்திருக்கிறது " என்று ஒரு கிளர்ச்சி செய்யக்கூடிய நிலைமை ஏற்பட்டது. பிரதம மந்திரி அவர்கள் திராவிட முன்னேற்றக் கழக அங்கத்தினர் ஒருவருக்கு எழுதிய கடித மூலமாகவும், அதற்குப் பிற்பாடு " ப்ரஸ் கான்பரன்சிலும் " அவர்கள் நிலைமையைத் தெளிவாக்கி இருக்

5th September 1960] [Sri C. Subramaniam]

இன்றார்கள். ஆகவே, இன்றைக்கு பிரதம மந்திரியவர்கள் கொடுத்த உறுதி மொழிக்குப் பிறகு, ஏதோ புறக்கணிக்கப்படுகிறது, அல்லது புறக் கணிக்கப்படுவதற்கு முயற்சிகள் நடக்கின்றன என்று சொல்வதைப்பற்றி நாம் கவலை கொள்ள வேண்டிய அவசியம் இல்லை. நமக்கு இன்றைக்கு உறுதி மொழி அளிக்கப்பட்டால் அதன் பிரகாரம் இன்றைக்கு நாம் என்ன நடவடிக்கைகள் எடுக்க வேண்டுமென்பதுதான் நம்முடைய நோக்க மாக இருக்க வேண்டும். அதற்காக, நாம் என்னென்ன முறையிலே பணியாற்ற வேண்டும், என்னென்ன சிபாரிசுகளைச் செய்ய வேண்டும் என்பதைப்பற்றி நாம் முடிவு செய்து அந்த முடிவுப்படி நாம் இன்றைக்கு நடவடிக்கை எடுக்கும்படி சர்க்காரைக் கோருவதுதான் நாம் செய்யக் கூடிய கடமை என்பது என்னுடைய கருத்து. "இப்போது நாம் சிபாரிசு செய்தது என்ன ? அவர்கள் ஏற்றுக்கொண்டிருப்பது என்ன ? ஏற்றுக் கொள்ளாவிட்டால் மேற்கொண்டு என்ன நடவடிக்கை எடுக்க வேண்டும் ?" என்பதைப்பற்றி யெல்லாம் நாம் ஆராயக் கடமைப்பட்டிருக்கிறோம்.

முதன் முதலாக நாம் ஏற்றுக்கொண்ட முடிவு, முதல் மெமோராண்ட மாக இருந்தாலும் சரி, இரண்டாவது மெமோரண்டமாக இருந்தாலும் சரி, 1965-க்குப் பிறகு "கான்ஸ்டிட்யூஷன்" பிரகாரம், 343-வது விதிப் பிரகாரம் **"The Official language of the Union shall be Hindi in Devanagari Script."** பதினைந்து வருஷத்திற்குள் அது அமுலுக்கு வராது. பதினைந்து வருஷத்திற்குப் பிறகு அந்த 343-வது விதி அமு லுக்கு வரவேண்டுமென்ற முறையிலே சட்டம் அமைந்திருக்கிறது. ஆனால், நாம் விரும்பியது, 1965 வரை என்று ஒரு இடைக்காலம் இருந்தால் போதாது, அதற்குப் பிற்பாடு ஆங்கிலத்தை ஒதுக்கி வைத்து விட்டு இந்தி நிர்வாக மொழியாகுமானால் அதன் மூலம் இந்தி பேசாத மக்களுக்குப் பெரும் தீமை விளையும் என்கின்ற காரணத்தினாலே, 1965-க்குப் பிற்பாடு என்ன நிலைமை ஏற்பட வேண்டுமென்பதைப்பற்றி நாம் முக்கியமாகப் பரிசீலனை செய்தோம். அதற்குப் பிற்பாடு நாம் எடுத்த முடிவு 1965-க்குப் பிற்பாடும் தொடர்ந்து ஆங்கிலம் நமக்கு நிர்வாக மொழியாக இருந்துவர வேண்டுமென்பதுதான். அப்படி நாம் சொல்லும்போது, இன்றைக்கு எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்டால், இரட்டை மொழிக் கொள்கையை வகுத்து அந்த முறையிலே தீர்வு காணமேண்டுமென்று சிபார்சு செய் தோம். "பைலிங்வல் பார்முலா." ஆங்கிலம், தமிழ் இரண்டும் நிர்வாக மொழியாக அமையவேண்டுமென்ற அடிப்படையிலே முடிவு செய்து அதைத்தான் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று திரும்பத் திரும்ப முயற்சி செய்து வந்திருக்கிறோம். இது மாதிரி இரட்டை மொழிக் கொள்கையை ஏற்றுக்கொள்ளும்போது, இது எந்தக் காலம் வரைக்கும் நீடிக்கவேண்டு மென்பதைப்பற்றியும் பரிசீலனை செய்ய வேண்டியது அவசியம். அதைப் பற்றியெல்லாம் பரிசீலனை செய்து நாம் "ப்ரொலாங்டு பைலிங்வலிஸம்" —அதாவது இன்னொரு இடத்தில் ஆலோசனை செய்யும்போது எந்தக் கால அளவு இருக்க வேண்டுமென்று சொல்லும்போது, எவ்வளவு காலத்திற்கு இது அவசியமோ அவ்வளவு காலத்திற்கு இது நீடித்திருக்க வேண்டுமென்ற கருத்தைத்தான் நான் வலியுறுத்தி வந்திருக்கிறேன். அந்தக் கருத்தை என்னுடைய சார்பாக மட்டுமல்லாமல் இந்தச் சபையில் செய்த முடிவின் அடிப்படையில் தமிழ் மக்களின் சார்பாகத் தெரிவித் திருக்கிறேன். அதோடு மட்டுமல்ல. இந்தக் காலவரையறையின் அவசியம் தீர்ந்து விட்டது என்பதை நிர்ணயம் செய்ய வேண்டியவர்கள் யார் என்பதைப் பற்றியும் என் கருத்தைத் தெரிவித்தேன். அதை முடிவு செய்யக் கூடியவர்கள் இந்தி பேசக்கூடிய மக்களாக இருக்க முடியாது. இந்தி பேசாத மக்கள்தான் எந்தக் காலம் வரை இது தொடர்ந்து இருக்க வேண்டுமென்பதைப்பற்றி முடிவு செய்ய முடியும். அந்தக் கருத்தைத் தெரிவித்த காலத்திலே அதற்கு ஏற்பட்ட எதிர்ப்புகளை அங்கத்தினர்கள் உணர்ந்திருப்பார்கள். ஆனால், காலாவட்டத்தில் இந்தப் பிரச்னை பற்றி மேலும் மேலும் பரிசீலனை செய்து பார்க்கும்போது, அது யாரோ ஒரு கூட்டத்தார் மட்டும் முடிவு செய்யக்கூடிய விஷயமல்ல. அது எல்லா மக்களின் பிரச்னையாக இருக்க வேண்டும். ஆகையினால்தான் எல்லாரும் ஏகோபித்த ஒரு முடிவாக இருக்க வேண்டுமென்ற காரணத்தினால்தான்

[Sri C. Subramaniam] [5th September 1960

திரும்பத் திரும்ப யோசித்து இந்த முடிவுக்கு வந்ததை, இந்தி பேசாதவர்கள் இந்த நிபந்தனையின்பேரில்தான் ஒப்புக்கொள்ள முன்வந்தார்கள். இல்லாவிட்டால் ஒப்புக்கொள்ளக்கூடிய நிலைமை ஏற்படாது என்பதை உணர்ந்து அதை ஓரளவு வரவேற்கிறேன்.

"As long as it is necessary, how long it is necessary shall be determined by the non-Hindi speaking people. This is the formula."

ஆகையால் இதை அடிப்படையாகக் கொண்டு இந்த முடிவு அமுலுக்கு வர வேண்டுமானால் என்ன செய்வது என்பதைப்பற்றிதான் நாம் இன்றைக்கு ஆராய கடமைப் பட்டிருக்கிறோம். இந்த மொழிப் பிரச்னையை நாம் பல்வேறு கட்டங்களில் பரிசீலனை செய்தபோது நாம் ஒரு முடிவுக்கு வந்தோம். அந்த முடிவு, நாம் முன்பு சொன்னது மாதிரி வேறு கருத்துக்கள் இல்லையென்ற காரணத்தினால் வந்த முடிவு அல்லது ஏகோபித்த கருத்து என்ற அடிப்படையில் அல்ல. இப்போதைக்கு இது ஒப்புக்கொள்ளப்பட்டால், இந்த அடிப்படையில் நடவடிக்கை எடுத்துக் கொள்ளலாம் என்ற முடிவுக்கு வந்தோம். அதுதான் முதல் முதல் கவனிக்க வேண்டியது. இந்த மொழிப் பிரச்னை பற்றி அரசியல் அமைப்பில் இருக்கக்கூடிய 17-வது பகுதியை மாற்றுவது அவசியமா, இல்லையா, அல்லது இந்த அரசியல் அமைப்பு விதிக்குள்ளாகவே முடிவு செய்திருக்கின்றோமா, அவைகளை யெல்லாம் நாம் செயலில் கொண்டு வந்துவிட முடியுமா என்பதைப்பற்றி யெல்லாம் நாம் திரும்பத் திரும்ப விவாதித்தோம் என்பது அங்கத்தினர்களுக்கு ஞாபகமிருக்கும். இதிலிருக்கும் நுணுக்கங்களைத் தெரிந்த பிறகு சட்டத்தைத் திருத்தத்தான் வேண்டுமென்ற முடிவுக்கு வந்தால் நானும் அதை ஒப்புக்கொள்ளத் தயாராக இருக்கிறேன். அரசியல் சட்டத்தைத் திருத்துவது என்று சொன்னால் சாதாரண காரியம் அல்ல. அதற்குத் தனிப்பட்ட முறைகள், தனிப்பட்ட விதிகள், தனிப்பட்ட அளவிற்கு வோட்டு எல்லாம் நிர்ணயிக்கப் பட்டிருக்கின்றன. இன்றைக்கு நாம் செய்யக்கூடிய முடிவு மட்டுமல்ல இது. இந்தியாவில் உள்ள எல்லா மக்களையும் பாதிக்கும் மொழிப் பிரச்னை இது. மறுபடியும் அரசியல் சட்டத்தைத் திருத்துவது என்றால்—திருத்துவதுபற்றி எல்லாரும் ஒப்புக்கொள்ளலாம்—எந்த முறையில் திருத்துவது என்பதைப்பற்றி ஆலோசனை செய்ய முற்பட்டால் ஒவ்வொரு பகுதியும் ஒவ்வொரு ஆலோசனை சொல்ல முன் வரும். நமக்குள்ளேயே இதுபற்றி ஆலோசனை செய்து ஒரு தனிப்பட்ட முடிவுக்குவரக் கஷ்டமான நிலைமை ஏற்பட்டாலும் ஏற்படலாம். ஆகையால் இன்றைக்கு இந்தப் பிரச்னை முதலில் இருந்து, 1947, 1948, 1949-லிருந்து இருந்து வருகின்ற இந்தப் பிரச்னையில் சிக்கலான முடிவு கண்டோமானால் மறுபடியும், "மெல்டிங் பாட்" என்பது போல் இந்த விஷயத்தைப் பரிசீலனை செய் என்று சொன்னால் அது கூடிய சீக்கிரம் முடியக் கூடிய காரியமல்ல. நாட்டின் கவனமும் இதிலே இழுத்துச் செல்லப்பட்டு விடுமாகையால் இது அவசியமா என்பதைப்பற்றி நன்றாக யோசனை செய்து முடிவு செய்ய வேண்டுமென்பதைத்தான் நாம் சர்வ கட்சிக் கூட்டத்தில் விவாதித்தோம். வாதித்ததற்குப் பிற்பாடு நாம் என்ன முடிவுக்கு வந்தோம் என்றால், 'அரசியல் சட்டத்தைத் திருத்த வேண்டிய அவசியம் இல்லை, அரசியல் சட்டத்தைத் திருத்தாமலேயே இதை நாம் செயலுக்குக் கொண்டுவர முடியுமானால் அதை நாம் வற்புறுத்திக் கொண்டிருக்க வேண்டிய அவசியம் இல்லை' என்ற முடிவுக்கு வந்தோம். இதிலிருந்தே, அரசியல் சட்டத்தைத் திருத்த வேண்டிய அவசியம் இல்லை என்று எல்லோரும் அந்தக் கருத்து உடையவர்களாக இருந்தார்கள் என்று சொல்ல முடியாது. ஆனால், இந்த அடிப்படையில் எல்லோரும் ஒப்புக்கொண்ட முறையில் நடவடிக்கை எடுத்துக்கொள்ளலாம் என்ற முடிவுக்கு வந்தோம். ஆகையால், முதல் மெமொராண்டத்திலும் சரி, இரண்டாவது மெமொராண்டத்திலும் சரி, அரசியல் சட்டத்தைத் திருத்தும் பிரச்னையைக் கவனியாமல், இருக்கும் அரசியல் சட்டத்திற்கு உள்ளாகவே, எந்த எந்த அளவுக்கு நாம் இதைப்பற்றி நடவடிக்கை எடுக்க முடியும் என்பதை ஆலோசனை செய்து பார்த்து, அரசியல் சட்டத்திலே இருக்கும் பிரகாரம் பார்லிமென்ட் சட்டத்தின் மூலமே நாம் இதற்குத் தீர்வு காண முடியும் என்று நினைத்து அந்த அடிப்படையில் முடிவு எடுத்து வந்தோம்.

5th September 1960]

SRI C. N. ANNADURAI : அரசியல் சட்டத்தைத் திருத்தாமலேயே இதற்குள்ளாகவே தேவையான பரிகாரங்கள் தேடிக்கொள்ளலாம் என்பது மெமொராண்டம் கொடுத்தபோது இருந்த கருத்து என்று அமைச்சர் அவர்கள் தெரிவிக்கிறார்கள். ஆனால், மொழிக் கமிஷனுக்கு அவர்கள் சிபார்சு செய்யும் நேரத்தில், அல்லது முதல் சிபார்சு அனுப்பிய பிறகு, அரசியல் சட்டத்தைத் திருத்த சென்னை சர்க்கார் விரும்புகிறார்கள் என்று டாக்டர் சுப்பராயன் அவர்கள் குறிப்பிட்டிருப்பதை அமைச்சருடைய கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : இதிலே இரண்டு விஷயங்கள் இருக்கின்றன. சர்க்காருடைய கருத்து—நாம் வாதித்ததற்கு பிற்பாடு முடிவுக்கு வந்தது. பார்லிமெண்ட் சட்டத்தின் மூலமாகவே நாம் எடுத்துக்கொண்ட முடிவுகள் பிரகாரம் செயல்படலாம் என்ற கருத்து தெரிவித்தோம். ஒரு சிலர், "இல்லை, இல்லை; இருக்கும் அரசியல் சட்டம் அதற்கு இடம் கொடுக்காது" என்று சொன்னார்கள். அப்பொழுது சொன்னேன், "நம்முடைய முடிவைச் செயல்படுத்துவதற்கு அரசியல் சட்டம் தடையாக இருந்தால், அந்தக் காலத்தில் அரசியல் சட்டத்தைத் திருத்தியாக வேண்டுமென்று நாங்கள் வலியுறுத்தத் தயாராயிருக்கிறோம்" என்று. ஆனால், எங்களுடைய அபிப்பிராயத்தை, நாங்கள் எடுத்துக் கொண்ட முடிவுகளை, இருக்கும் அரசியல் சட்டத்தின் மூலமாகவே, பார்லிமெண்ட் சட்டமாகவே நிறைவேற்ற முடியும் என்பது எங்களுடைய நம்பிக்கை. "அந்த நம்பிக்கை தவறு; அதற்குப் போதுமான அதிகாரம் இல்லை" என்றால், இப்பொழுதே உறுதி கொடுக்கிறேன்—சென்னை சர்க்காரே முன் வந்து ஏற்றுக்கொண்ட முடிவுகளை நிலைநிறுத்தும் முறையிலே அரசியல் சட்டம் திருத்தப்படவேண்டும் என்று அப்போது ஏகோபித்துச் சொல்வதற்கு நாங்களும் தயாராக இருக்கிறோம் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

SRI C. N. ANNADURAI : "தேவைப்பட்டால் அரசியல் சட்டத்தைத் திருத்துவதற்கு சென்னை சர்க்கார் முயற்சி எடுத்துக்கொள்ளும்" என்று இப்பொழுது அமைச்சர் தெரிவிப்பதற்கும், "அரசியல் சட்டத்தைத் திருத்துவதிலே ஏராளமான கஷ்டங்கள் இருக்கின்றன" என்று முன்னாலே பேசியதற்கும் பொருத்தம் என்ன இருக்கிறது என்பதை அவர்கள் தெளிவு படுத்தவேண்டும்.

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்போதும் பொருத்தம் இருக்கிறது. இரண்டு பிரச்னைகள் வரும்போது, எது அந்த நேரத்திலே முக்கியம் என்று பார்க்கவேண்டியதாக இருக்கிறது. நமக்கு முக்கியமான பிரச்னை—நமக்குச் சாதகமாகத் தீர்வு காணவேண்டும் என்பது. தீர்வு காணமுடியவில்லையென்றால், அரசியல் சட்டத்தைத் திருத்துகிற கஷ்டம் பெரிதா, திருத்தாமல் இருக்கிற கஷ்டம் பெரிதா என்று பார்க்கும்போது, அப்பொழுது அது இரண்டையும் சீர்தூக்கிப் பார்க்கவேண்டியதாக இருக்கிறது. அப்படிப் பார்க்கும்போது, நமக்குத் தீர்வு காணுவது தான் முக்கியம். ஆகையால், ஒன்றையொன்று வைத்துக்கொண்டு, முதலிலே கவனித்ததையும் இரண்டாவது கவனித்ததையும் வைத்துக்கொண்டு முரண்பாடு காண முடியாது. இன்றைக்கு நாம் நினைப்பது, இருக்கும் அரசியல் சட்டத்திற்கு உட்பட்டே நாம் எடுத்த முடிவுகளைச் செயல்படுத்த முடியும் என்பது என்னுடைய நம்பிக்கை. அந்த அடிப்படையிலே இதைக்குறித்து அரசியல் சட்டத்தில் ஷரத்து இருக்கவேண்டும் என்பதற்காக மாற்ற வேண்டிய அவசியம் இல்லை என்பது என்னுடைய கருத்து. சட்ட நிபுணர்களோ, சுப்ரீம் கோர்ட்டோ வேறுவிதமாகத் தீர்ப்பு சொல்லக்கூடுமானால், அப்பொழுது யோசித்துப் பார்க்கவேண்டியதாக இருக்கிறது.

அரசியல் சட்டம் எப்படி இருக்கிறதோ, அதற்குத் தேவை எந்த அளவு என்று எடுத்துக்கொண்டு முடிவு பண்ணலாமா, இல்லை, அரசியல் சட்டத்தில் எப்படி இருந்தாலும் இந்த முடிவு தான் எங்களுக்கு அடிப்படையான கோரிக்கை, அந்த கோரிக்கைக்கு அரசியல் சட்டம் குறுக்கே

இருந்தால், மற்ற சங்கடங்களை எதிர்ப்பாராமல் அதைத் திருத்திக்கொள்வதிலே ஆட்சேபனை சொல்ல முடியாது, என்பதிலே எங்களுக்கு முரண்பாடு இருக்காது என்று நான் வலியுறுத்திச் சொல்கிறேன்.

நாம் பார்க்கவேண்டியது—எல்லோரும் ஒப்புக்கொண்டது—பார்லிமென்டரி கமிட்டி சிபார்சு செய்திருக்கக் கூடிய எல்லாவற்றையுமே, இன்றைக்கு பிரதம மந்திரி கொடுத்திருக்கும் உறுதிமொழியின்படி, இருக்கும் அரசியல் சட்டத்திற்கு உட்பட்டே நாம் நடவடிக்கை எடுத்துக்கொள்ள முடியும் என்ற கருத்தைத் தெரிவித்திருக்கிறோம். "பின்னால் நடவடிக்கை எடுக்க முடியாது, அரசியல் சட்டத்திலே வேறுவிதமாக இருக்கிறது" என்று சொன்னால் அப்பொழுது அது பரிசீலனை செய்யவேண்டிய விஷயம். அதற்காகத்தான் உறுதிமொழி கொடுத்து, நாம் நினைத்ததற்கும் மீறி, நாம் இப்பொழுது அறிவுக்கு எட்டியவரையில் பரிசீலனை செய்து பார்த்து முடிவுக்கு வந்திருக்கிறோம். அந்த அறிவுக்கும் மீறி வேறு யாராவது செய்யக்கூடிய முடிவு, எல்லோரையும் கட்டுப்படுத்தக்கூடிய ஒரு தீர்ப்பு வருமானால் அப்பொழுது வேறு வழி இல்லை, அப்பொழுது திருத்தித்தான் தீரவேண்டும் என்ற நிலைமை ஏற்படுகிறது. ஆகையால்தான், இதைப் பற்றி முடிவு எடுக்கக் கூடியவர்கள் இதை மனதில் வைத்துக்கொண்டு முடிவு எடுக்கவேண்டும் என்பதற்காக சென்னை சர்க்காருடைய நிலைமையையும் விளக்கவேண்டும் என்பதற்காக அரசியல் சட்டத்தைத் திருத்துவதில் எங்களுடைய கருத்து என்ன என்பதையும் நாம் தெரிவித்துக் கொள்ளவேண்டிய அவசியம் இப்பொழுது ஏற்படுகிறது. ஆகையால்தான், இப்பொழுது நாம் அரசியல் சட்டத்திற்கு உட்பட்டே நடவடிக்கை எடுத்துக் கொள்ள முடியுமானால் அதை நாம் வற்புறுத்திப் பெறுவதுதான் சரியான முறை என்று நான் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். ஆகையால்தான், இன்றைக்குப் பிரதம மந்திரி அவர்கள் கொடுத்திருக்கும் உறுதிமொழி அடிப்படையிலே, நாம் தெரிவித்த கோரிக்கைகளின் அடிப்படையிலே, பார்லிமென்ட் சட்டத்தின் மூலமாகவே அதை நிறைவேற்ற முடியுமானால் அப்பேர்ப்பட்ட முடிவைச் சர்க்கார் தங்களுடைய கொள்கையாக ஏற்றுக்கொண்டிருக்கும்போது அதை நிறைவேற்றுவது மிகவும் கடினமாக இருக்காது என்பதைத் தான் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

ஆகவேதான் இன்றைக்கு இதிலே முடியுமா, முடியாதா என்பதைப் பற்றியெல்லாம் நாம் பரிசீலனை செய்து பார்க்கவேண்டியது, திரு. பந்த் அவர்கள் கூறிய சட்டம் உருவாகும்போது அந்தச் சட்டம் எந்த முறையில் இருக்கிறது, எந்த அடிப்படையில் இருக்கிறது என்று அந்தச் சட்டத்தைப் பார்த்ததற்குப் பிறகுதான் அதில் முடிவு கூற முடியும். இன்றைக்கு இருக்கும் பிரச்னை—நாம் முடிவு எடுக்கக் கூடியது, நாம் முன் சொன்னதை ஒப்புக்கொள்ளுகிறோமா, இல்லையா என்பதுதான். தீவிரக் கொள்கை கொண்டிருக்கும் திராவிட முன்னேற்றக் கழகத்தார்கூட, அவர்கள் அடிப்படையாக தங்களுடைய கோரிக்கையாக வைத்திருப்பது, பிரதம மந்திரி அவர்கள் கொடுத்த உறுதிமொழி காப்பாற்றப்படவேண்டும், அதை மீறி, அதற்கு முரண்பட்டு எந்தவிதமான நடவடிக்கையும் எடுக்கக்கூடாது என்று அவர்களும் பல இடங்களில் வற்புறுத்தி, தீர்மானம் மூலமாக வற்புறுத்திச் சொல்லியிருக்கிறார்கள். எனக்குத் தெரிந்தவரையில் கூட்டங்களிலும் வற்புறுத்திக்கொண்டு வருகிறார்கள் என்பது என்னுடைய கருத்து. ஆகையால்தான், பிரதம மந்திரி அவர்கள் கொடுத்த உறுதிமொழி சட்டரூபமாக நிறைவேற்றப்படப் போகிறதா இல்லையா என்பதைப்பற்றியும் பார்க்கவேண்டியவர்களாக இருக்கிறோம். எனக்கு நம்பிக்கை இருக்கிறது —இது இவ்வளவு தெளிவாக, உறுதியாக வாக்குறுதி கொடுத்ததற்குப் பிற்பாடு அந்த வாக்குறுதிகள் புறக்கணிக்கப்படமாட்டா என்ற நம்பிக்கை இருக்கிறது. ஆகவே, இன்றைக்கு முடிவு செய்யவேண்டியது, முதலிலே அரசியல் சட்டத்தை இப்பொழுது இருக்கும் நிலைமையிலே திருத்தும்படி வற்புறுத்தவேண்டிய அவசியம் இல்லை என்பது முதல் முடிவாக இருக்க வேண்டும் என்பதை நான் தாழ்மையாக, முக்கியமாக திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் அவர்களுக்குத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். அந்த அடிப்படையிலே நாம் பார்க்கவேண்டியவர்களாக இருக்கிறோம்.

5th September 1960] [Sri C. Subramaniam]

அதற்கு அடுத்தபடியாக, பிரஸிடென்ட் உத்தரவு இருக்கிறதே, அது ஒரு குழப்பத்தை ஏற்படுத்தியிருக்கிறது என்பதைப்பற்றி நாம் மறுக்க முடியாது. அதுவும் ஒரு உண்மையான குழப்பத்தைப் பலருடைய மனதிலே ஏற்படுத்தியது என்பதிலும் சந்தேகம் இல்லை. அதற்குப் பிற்பாடு ஏற்பட்டிருக்கும் விளைவின் காரணமாக அந்தக் குழப்பம் நீக்கப்பட்டிருக்கிறது என்று தெரிவித்துக்கொள்ளுகிறேன். மேலாக அவர் வாசகத்தைப் பார்த்துக்கொண்டு ஒரு சமயம் ஏமாற்றுவதற்காக வந்ததோ என்றுகூட சிலர் சந்தேகப்படவேண்டிய நிலைமை ஏற்பட்டிருந்தது. ஆனால் 344-வது பிரிவின்கீழ் என்ன உத்தரவு போடவேண்டியிருந்தது என்பதைப் பற்றி ஒவ்வொன்றாக பரிசீலனை செய்து பார்த்தால் 344-வது பிரிவின்கீழ் போடவேண்டிய உத்தரவு அளவுக்கு மட்டும் அவர்கள் நிறுத்திக்கொண்டிருக்கிறார்கள் என்ற ஒரு முடிவை நாம் ஏற்றுக்கொண்டால், அதிலே இருக்கக்கூடிய, பிரதம மந்திரி அவர்கள் கொடுத்த உறுதிமொழிக்கும் நாம் கொடுத்த கோரிக்கைக்கும் முரண்பாடு ஒன்றும் இல்லை என்பதைத் தெரிவித்துக்கொள்கின்றேன். ஒன்று சொல்லலாம். "அந்த உத்தரவிலே என் பிரதம மந்திரி சொல்லும் பிரகாரம், சட்டம் செய்யப்போகிறோம் என்று சொல்லியிருக்கக் கூடாது?" என்று கேட்கலாம். அது 344-வது பிரிவின் கீழ் வருவது இல்லை. 344-வது பிரிவின்கீழ் 1965-ம் வருஷம் வரைக்கும் என்ன நடவடிக்கைகள் எடுக்கவேண்டும் என்பதைப்பற்றி 1965-ம் வருஷமே இந்தச் சிபார்சின் பிரகாரம் ஒரு நடவடிக்கை எடுக்கலாம். ஆங்கிலத்தை விட்டுவிட்டு ஹிந்தியை உபயோகப்படுத்த ஒரு வரம்பு ஏற்படுத்தலாம். அல்லது ஆங்கிலத்தையே உபயோகப்படுத்த வேண்டுமானாலும் ஏற்படுத்தலாம். ஆனால், ஜனாதிபதி உத்தரவில் 1965-ம் வருஷம் வரைக்கும் அம்மாதிரி ஒரு வரம்பை ஏற்படுத்துவது அவசியம் இல்லை, கூடாது என்ற முடிவைத் தெரிவித்திருக்கிறார்கள். மற்றவைகளைப்பற்றிப் பார்த்தால், 1965-ம் வருஷத்திலேயே ஹிந்தியும் ஒரு ஆட்சிமொழி என்ற இடத்தை ஏற்றுக்கொள்ளவேண்டும் என்றால் அதற்காக என்ன நடவடிக்கைகள் எடுத்தால் அந்த நிலையை அடையமுடியும் என்ற குறிப்புத்தான் அதிலே இருக்கிறதே தவிர, வேறு ஒன்றும் இல்லை என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

SRI C. N. ANNADURAI : அவர்கள் குறிப்பிட்டது—

"Notwithstanding anything in Article 343, the President may, after consideration of the report referred to in clause (5), issue directions in accordance with the whole or any part of that report".

Our complaint has been that no stress has been laid on the operative part.

THE HON. SRI C. SUBRAMANIAM : 343-வது பிரிவில் என்ன சொல்லப்பட்டிருக்கிறது என்றால் 15 வருஷங்களுக்குப் பிற்பாடு ஆங்கிலமே இருக்காது என்றும், 15 வருஷங்கள் வரைக்கும் ஆங்கிலம் தொடர்ந்து இருக்கவேண்டும் என்றும் கண்டிருக்கிறது. 344-வது பிரிவு பிரகாரம் மொழிக்கமிஷன் நியமிக்கப்படவேண்டும் என்று கண்டிருக்கிறது.

"*Article* 344 (1).—The President shall, at the expiration of five years from the commencement of this Constitution and thereafter at the expiration of ten years from such commencement, by order constitute a commission which shall consist of a Chairman and such other members representing the different languages specified in the Eighth Schedule as the President may appoint, and the order shall define the procedures to be followed by the Commission".

அது ஒன்று. இந்தக் கமிஷன் எந்தெந்த விஷயங்களைப் பரிசீலனை செய்ய வேண்டுமென்று சொல்லப்பட்டிருப்பது தான் ரொம்பவும் முக்கியமானது.

[Sri C. Subramaniam] [5th September 1960

" (2) It shall be the duty of the Commission to make recommendations to the President as to—

(*a*) the progressive use of the Hindi language for the official purposes of the Union; "

Article 344 (2) (*b*) is the most important. It states—

" (*b*) restrictions on the use of the English language for all or any of the official purposes of the Union; "

In spite of Article 343, the President can pass an order restricting the use of the English language for certain purposes.

Now, let us go to items (*c*), (*d*) and (*e*), which state—

(*c*) the language to be used for all or any of the purposes mentioned in Article 348;

(*d*) the form of numerals to be used for any one or more specified purposes of the Union; and

(*e*) any other matter referred to the Commission by the President as regards the official language of the Union and the language for communication between the Union and a State or between one State and another and their use."

Article 438 deals with the language to be used in the Supreme Court and in the High Courts.

I shall now take up some of these points. As for the restrictions on the use of the English language for all or any of the official purposes, the Union President has categorically stated that there shall be no restriction. So, there is no question of its replacement now. It shall continue as it is. As for the language to be used for all or any of the purposes mentioned in Article 348, the position with reference to the language to be used in the Supreme Court and in the High Courts has been clearly stated in that Article itself.

As for the form of numerals to be used for any one or more specified purposes of the Union, we have categorically stated that the international numerals should continue to be used and I am sure they will be used. In the Hindi-speaking States, they may perhaps use the Hindi numerals and that is a point for discussion later on. As far as this is concerned, we need not attach much importance to it.

As for the last item " any other matter referred to the Commission by the President as regards the official language of the Union and the language for communication between the Union and a State or between one State and another and their use.", the decision is that the *status quo* shall continue.

Thus, these are the only matters on which the Commission should enquire into and make recommendations and with reference to which the President is called upon to pass his orders.

SRI C. N. ANNADURAI : Even the Commission went out of the way.

THE HON. SRI C. SUBRAMANIAM : I fully agree. The Commission made a mess of the whole thing and went beyond its terms of reference. While it was willing to suggest certain things, it was afraid of suggesting those things and therefore left things vague. If I may say so, the Language Commission, instead of suggesting a solution to the language problem, has greatly added to the difficulties. That will be the verdict of not only the present-day generation, but also that of the future generation. I am sure the future generation will give the same verdict. With great respect to the people who participated in that Commission—I suppose that they sincerely believed that they were doing the right thing by the nation and that is a quite different thing altogether—I would say that it is an error of judgment. That is all what I wish to say in that connexion.

ஆகையினாலே இப்பொழுது மொழிக் கமிஷன் என்னென்ன விஷயங்களை கவனிக்கவேண்டுமோ அதற்குப் புறம்பாக சில விஷயங்களை கவனித்திருக்கிறார்கள். பிறகு அதுபற்றி பார்லிமெண்டரி கமிட்டியிலும், பார்லிமெண்டிலும் விவாதம் நடைபெற்றது. அதற்குப் பிற்பாடும் தாங்கள் புறம்பாக உத்தரவு போடுகிறோம் என்று சொல்ல முடியாது. இதை வைத்துக்கொண்டு பார்க்கப்போனால், "பிரஸிடென்ஷியல் ஆர்டர்" முரணை ஒன்றும் இல்லை என்று சொல்லும்பொழுது, இப்பொழுது முரணை நடவடிக்கை எடுத்துக்கொள்ளுவதாக உத்தேசம் இல்லை என்று சொல்லும்பொழுது, அதை நாம் ஏற்றுக்கொள்ளுவது தான் சரி. இல்லை, முரணை இருக்கிறது என்று சொன்னால் அவர்களுக்கு ஒரு இடம் கொடுக்கிறது, அந்த உத்தரவு நாம் போட்ட கோரிக்கைகளுக்கு விரோதமாக இருக்கிறது. பிரதம மந்திரி அவர்களின் வாக்குறுதிக்கு விரோதமாக அந்த உத்தரவிலே ஏதோ இருக்கிறது என்று சொல்லி நாம் அவர்களுக்கு ஒரு இடம் கொடுக்கவேண்டிய அவசியம் இல்லை. அவர்கள் சொல்லுகிற பிரகாரம் முரண் ஒன்றும் கிடையாது, முரணை ஒன்றும் செய்வதாக உத்தேசம் கிடையாது என்று வாக்குறுதி கிடைத்த பிற்பாடு, அதை ஏற்றுக்கொண்டு இனிமேல் நடக்கக்கூடிய நடவடிக்கைகளில் வாக்குறுதி மீறப்படுகிறதா என்பதைப் பார்த்துக்கொள்ளுவதில் நாம் சர்வ ஜாக்கிரதையாக இருக்க வேண்டியது அவசியம் என்பதைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். ஏனென்றால் நடவடிக்கைகள் எடுக்கக்கூடிய விஷயத்தில் பிரதம மந்திரி அவர்களோடு நின்று விடவில்லை. கொள்கை என்னவென்பதை அவர் வகுக்கலாம். அதை மந்திரி சபை ஒத்துக்கொள்ள வேண்டும். பிறகு பார்லிமெண்டு ஒத்துக்கொள்ளவேண்டும். பிறகு நடவடிக்கை எடுக்கும் பொழுது பல்வேறு நபர்கள் வந்து சேருவார்கள். இந்தி வருவதற்கு இவ்வளவு தூரம் தாமதப்படுத்தவேண்டுமா, அது உடனே வருவதற்கு தகுதி இருக்கிறது என்றெல்லாம் நினைத்துக்கொண்டு நடவடிக்கை எடுக்கக் கூடிய அதிகாரிகள் அவ்வப்பொழுது வந்து சேர்ந்துவிடலாம். (குறுக்கீடு) அரசியல் வாதிகளும் இருக்கிறார்கள். நடவடிக்கை எடுக்கும் பொறுப்பு அதிகாரிகளிடத்தில் தான் இருக்கிறது. அளவுக்கு மீறி, சட்டத்திற்கு மீறி சில அதிகாரிகள் நடந்துகொண்டுவிடுகிறார்கள். இந்தி விஷயத்தில் மட்டுமல்ல. நம்முடைய நிர்வாகத்தை எடுத்துக்கொண்டால் சில சமயங்களில் இதுமாதிரி இருக்கவேண்டுமென்று நினைத்துக்கொண்டு அதிகாரிகளும் கூட சட்டத்திற்கும் புறம்பாக நடந்துகொண்டுவிடுகிறார்கள். ஆகவே, அதைப்பற்றி குறை சொல்லுவதில் பிரயோசனம் இல்லை. நாம் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். ஏதாவது அம்மாதிரி தவறுதல் நடக்குமானால் நம்முடைய பிரதிநிதிகள் அதற்கு வேண்டிய நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும். இந்த சர்க்கார் நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டியிருந்தால், அதற்கும் நாம் தயாராக இருக்கவேண்டும் என்பதை வலியுறுத்திச் சொல்ல விரும்புகிறேன்.

[5th September 1960

**SRI K. ANBAZHAGAN** : தலைவர் அவர்களே, மத்திய சர்க்காருடைய அதிகாரிகள் தவறான முறைகளிலே ஈடுபடுகிறபொழுது நாம் கவனமாக இருக்கவேண்டும் என்று அமைச்சர் அவர்கள் சொல்லுகிறார்கள். அப்படித் தவறான வழியில் ஈடுபடக்கூடிய முறை இங்கு இருக்கிற 344-வது விதியினுடைய இரண்டாவது வகுப்பு "பி" பிரிவில் கண்டபடி "restrictions on the use of the English Language," என்ற முறையில் வரக்கூடிய சூழ்நிலை இருக்கிற காரணத்தினால், அரசியல் சட்டத்தில் அதற்கேற்ற சூழ்நிலை இல்லை என்பதை அறிந்து, அரசியல் சட்டத்தைத் திருத்தினால் தான் இந்தத் தவறு ஏற்படாமல் இருக்கும் என்பதை அமைச்சர் அவர்கள் ஒத்துக்கொள்ளுவார்களா ?

**THE HON. SRI C. SUBRAMANIAM** : நான் முன்பே சொன்னேன். அரசியல் சட்டத்திலுள்ள விதிகளை நாம் சரியான முறையில் அமுல் நடத்தினால் இந்தத் தவறுகளெல்லாம் இன்றைக்கு இருக்காது என்று. இதைவிட அரசியல் சட்டத்தில் ரொம்பவும் விளக்கமாகச் சொல்லப் பட்டாலும், அதற்கும் மீறி தவறு நடக்கக் கூடிய சந்தர்ப்பமே ஏற்படாதா என்ன ? படித்த ரொம்ப பெரிய இடங்களிலே கூட அரசியல் சட்டத்தில் இருக்கக்கூடிய விதிகளுக்கும் மீறி நடக்கிறபொழுது, இப்பொழுது நாம் அதைப்பற்றி ஆச்சரியப்படுவதற்கு இல்லை. நாம் முதலிலே முக்கியமாகப் பார்க்கவேண்டியது இன்றைக்கு இருக்கக்கூடிய நிலைமையிலே—

"It shall be the duty of the Commission to make recommendations to the President as to "restrictions on the use of English language . . ."

ஆங்கிலம் உபயோகப்படுத்துவதில் "ரெஸ்டிரிக்ஷன்" வேண்டியதில்லை என்று ஜனாதிபதி உத்தரவு போட்டிருக்கிறார்கள்.

"No restriction shall be placed on the use of the English language." That is the President's Order.

**SRI K. ANBAZHAGAN** : The spirit of the Constitution is against it.

**THE HON. SRI C. SUBRAMANIAM** : How is it against? It is the duty of the President to pass an order taking into account the entire circumstances. After taking into account the various recommendations made by various bodies, he has categorically stated that no restriction shall be placed. Under these circumstances, I do not know how it is against the spirit of the Constitution, and if it was against the Constitution, the President should not have passed that order at all.

**SRI K. ANBAZHAGAN** : Articles 343 and 344 more or less encroach upon the position of the English language. They do not liberally allow the English language or its use to the extent Hindi is allowed.

**THE HON. SRI C. SUBRAMANIAM** : Ultimately, it depends upon the implementation. I do agree that implementation could be in a slightly different way without violating the provisions contained in the Constitution. I completely agree that it is the responsibility of the persons who now give the various assurances. If those assurances are broken in any way, then of course, we are entitled to take note of it and then consider the various measures necessary in that regard. The point for consideration now is this

5th September 1960] [Sri C. Subramaniam]

Should we assume even now that those assurances that have been given now would be broken? That means, that we doubt the *bona fides* of those who gave those assurances. If those assurances are are not kept up, I am afraid—whatever may be the constitutional provisions—God alone should save the country.

SRI C. N. ANNADURAI : Sir. Mention has been made that the President has definitely stated in his directive that no restriction should be placed on the use of English language. I charge the Government with this heinous crime, viz., that already they have restricted the use of the English language in various ways. I would like to know from the Hon. Minister, what is the statutory provision which enables the Indian Parliament being called the Lok Sabha. What is the statutory provision for printing the Money Order Forms in Hindi?

THE HON. SRI C. SUBRAMANIAM : I do not want to go into the merits of the points raised by the hon. Member. If, as a matter of fact, there has been any violation or restriction which is against the spirit—leave alone the letter—of the assurances already given, I am prepared to look into it and make representations to them. After all, there is nothing in the name, whether it is in English or in Hindi or in Sanskrit.

11–30 a.m.

SRI C. N. ANNADURAI : The Hon. Minister has stated that there is nothing in the name, but it happens to be a one-way traffic.

THE HON. SRI C. SUBRAMANIAM : How could there be a two-way traffic? இப்பொழுது நாம் கவனிக்க வேண்டியது, இந்தச் சட்ட வரம்புக்குள்ளே, நமக்குக் கொடுத்திருக்கும் உறுதிமொழியை நிறைவேற்ற முடியுமா என்று பார்க்கிறோம். பின்னால் முடியவில்லை என்று சொன்னால், அப்பொழுது நாம் கவனிக்க வேண்டியது என்ன, என்னென்ன நடவடிக்கைகள், கூட்டாகவும், தனியாகவும் எடுக்கவேண்டும் என்பதெல்லாம் அப்பொழுது எழும், இப்பொழுது இல்லை. நாம் இப்பொழுது இந்த வாக்குறுதியை ஏற்றுக்கொள்வோம், அதை நம்புவோம். வாக்குறுதிக்கு ஏற்றபடிதான் நடவடிக்கைகள் எடுப்பார்கள், அதைப் புறக்கணிக்கும் முறையில் எடுக்கப்படமாட்டாது என்ற அந்த நம்பிக்கையில் இருப்போம். அப்படியில்லையென்றால், அப்பொழுது அதைப்பற்றித் திரும்பவும் நாம் உட்கார்ந்து யோசித்துப் பேசலாம். அதைத் தான் நான் திரும்பத் திரும்பச் சொல்லுகிறேன். இன்றைக்கு இருக்கும் நிலையில் பிரசிடெண்டு ஆர்டருக்கும் பிறகு இன்றைக்குக்கொடுத்திருக்கும் உறுதிமொழி எப்படி நிறைவேற்றப்படுகிறது என்பதைத்தான் பார்க்க வேண்டும். இப்பொழுது நமக்கு ஏற்பட்டிருக்கிறது அந்த நம்பிக்கைதான். அந்த உறுதிமொழி காப்பாற்றப்படுகிறதா, இல்லையா என்று பின்னால் தான் சொல்ல முடியும். ஆகவே, இப்பொழுது இந்த உறுதிமொழியை ஏற்றுக் கொண்டு, பின்னால் இதற்கு முரணாக நடவடிக்கைகள் இருந்தால், அப்பொழுது தான் யோசிக்க வேண்டிய கட்டம் வரும். இப்பொழுதே அதை அவநம்பிக்கையுடன் அணுகுவது சரியில்லை. உகந்ததல்ல, என்பது என் கருத்து.

இன்னொரு கருத்தையும்—வேறொரு இடத்திலும் சொன்னேன்—திராவிட முன்னேற்றக் கழகத்திற்காகச் சொல்லுகிறேன் ; அவர்கள் மொழிப்பிரச்னையில் பங்குகொள்வதை வரவேற்கிறேன். அவர்கள் பங்கு

கொள்கிறார்கள் என்று சொல்லும்போது, அதன் "இம்ப்ளிகேஷன்ஸ்" என்ன என்பதைத் தெரிந்துகொண்டு பங்குகொள்ள வேண்டும் என்று தெரிவித்துக் கொள்ளுகிறேன். தெரிந்து கொண்டிருக்கிறார்களா இல்லையா என்பதை முடிவு செய்ய வேண்டியது அவர்களுடைய விஷயம். அவர்கள் ஆட்சி மொழிப் பிரச்னையில் பங்குகொள்வதை நான் வரவேற்கிறேன். அவர்கள் அப்படிப் பங்கு கொள்வது ஓரளவுக்கு, இந்தியா ஒற்றுமை யாக இருக்கவும், ஒன்றுபட்ட இந்தியா என்ற சூழ்நிலைக்குச் சாதகமாக இருக்கும் என்ற அந்த அடிப்படையில் அவர்கள் பங்கு கொள்வதை வர வேற்கிறேன் என்று சொல்லிக்கொண்டு . . . . (குறுக்கீடு—திரு சி. என். அண்ணாதுரையினால்)—நீங்கள் பேசும்போது சொல்லுங்கள், நான் பதில் சொல்லுகிறேன்—இந்தப் பிரேரேபணையை விவாதத்திற்கு எடுத்துக் கொள்ளவேண்டும் என்று கோருகிறேன்.

Sri V. K. RAMASWAMY MUDALIYAR: Sir, I move the following amendment :—

*Add* the following at the end—

"and on such consideration this House recommends to the State Government that the Central Government be requested not to subject non-Hindi peoples to any discrimination in Central Government offices and to undertake legislation in order to implement the Prime Minister's assurances regarding the continued use of the English language for the official purposes of the Indian Union and of Inter-State Communications.".

Sri T. L. SASIVARNA THEVAR: Sir, I second the amendment.

Sri M. KALYANASUNDARAM: Sir, I move the following amendment :—

*Add* the following at the end—

"and on such consideration this House recommends that the following steps be taken by the Government—

(A) to represent to the Union Government, the urgent need to modify the President's Order so as to provide for :

(1) Legislative measures under article 343 (3) of the Constitution, for the use of English as subsidiary Official Language of the Union Government, without fixing time-limit;

(2) for recognising the regional languages like Tamil, for conducting the tests of the Union Public Service Commission, in addition to Hindi and English; and

(3) for taking immediate steps for the use of Tamil in the business of local offices of the Union Government, as far as possible, such as post-cards, money orders, registration, etc.

(B) to take effective and expeditious steps for the replacement of English by Tamil as State Official Language, such as :

(1) use of Tamil in the proceedings of all departments;

(2) immediate recognition of Tamil in addition to English, for the proceedings of the High Court and other courts including judgment and orders;

5th September 1960] [Sri M. Kalyanasundaram]

(3) for recognising Tamil in addition to English, for the tests of State Service Commission: and

(4) ensuring the implementation of the Government Order, introducing Tamil as medium of instruction in all the colleges from 1963 and to expand further to other faculties as speedily as possible.''

SRI N. K. PALANISAMI : Sir, I second the amendment.

SRI K. ANBAZHAGAN : Sir, I move the following amendment :—

*Add* the following at the end :—

"and on such consideration this House urges the State Government, that the Central Government be requested to take immediate steps to amend the Constitution so as to provide for the continuance of English as the official language until such time when some of the modern Indian languages attain suitability for acceptance as official languages of the Union.''

SRI A. GOVINDASAMY : Sir, I second the amendment.

DEPUTY SPEAKER : Now the motion and the amendments are before the House for discussion.

SRI N. K. PALANISAMI : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, நம் தேசிய இயக்கம் மேல் தட்டில் இருந்து பொது மக்கள் மத்தியில் புகுந்த சமயத்தில், ஆங்கிலம் அன்னிய பாஷை என்றும், மக்கள் பொதுவாகப் பேசும் பிரதேச மொழி பொதுபாஷையாக இருக்க வேண்டும் என்ற உணர்ச்சி ஏகாதிபத்தியத்தை எதிர்த்ததன் காரணமாக ஏற்பட்டது. இதில் இயற்கையாக பெரும்பகுதி மக்கள் ஹிந்தியைப் பேசுவதால், சான்ஸ்க்ருடைஸ்ட் பாரம், மற்றதை ஒத்துக்கொள்ளாவிட்டாலும், சுலபமான முறையில் அந்த சமயத்தில் ஏற்றுக்கொள்ளப்பட்டது. அத்துடன் பொதுமக்கள் தங்கள் பிரதேச மொழி வளரவேண்டும் என்றும் ஆர்வம் கொண்டார்கள். நிர்வாக மொழியாகவும், கல்வி போதனா மொழியாகவும் பொதுமக்கள் புரிந்துகொள்ளும் முறையில், பிரதேச மொழி கையாளப்பட வேண்டும் என்று சொன்னார்கள். ஆனால், இப்பொழுது சர்க்கார் இதில் இருவிதமான கொள்கையைக் கையாண்டு இதை நடத்திக்கொண்டு போவதால் மொழி விஷயத்தில் குழப்பம் ஏற்பட்டிருக்கிறது. ஒரு பக்கத்தில் மத வாதிகள், தங்கள் மதம் பெரிது என்று சொல்லும்போது, இந்த மொழியை ஆயுதமாக வைத்துக்கொண்டு ஹிந்திதான் இந்தியாவின் பொதுமொழியாக இருக்கச் சிறந்தது என்று சொல்லி, உடனடியாக அதைக்கொண்டு வரவேண்டும் என்று கிளர்ச்சி செய்கிறார்கள். இன்னொரு பக்கத்திலே அதற்கு எதிரான கிளர்ச்சி. இப்படி ஏற்பட்டிருக்கிற கிளர்ச்சிகள் காரணமாக, பொது மக்கள், ஹிந்தி தாய்மொழியாக இல்லாதவர்கள், பீதியடைந்து, பிரிவினை மனோபாவம் ஏற்பட்டிருக்கிறது. ஆகவே, இந்த மொழிப் பிரச்னையை, அரசியல் பிரச்னையாகப் பார்க்காமல், இதை ஒரு தேசீயப் பிரச்னையாகப் பார்க்க வேண்டும். அப்பொழுதுதான் இந்த பிரச்னைக்கு ஒரு முடிவான தீர்வு காணமுடியும். எந்த மொழியானாலும், அந்த மொழி மற்ற மொழிகளோடு சமமாகப் பாவிக்கப்படவேண்டும்.

அதுமட்டுமல்ல. இன்றைய தினம் ஆட்சி மொழி தமிழ் என்று போட்டிருக்கிறோம். எல்லா இலாகாவிலும் **1963**-ம் ஆண்டிலிருந்து தமிழிலேயே நிர்வாகத்தை நடத்த வேண்டுமென்பது சர்க்காருடைய திட்டம். அதற்கு வேண்டிய நடவடிக்கைகளும் எடுக்கப்பட்டு வருகின்றன. அதற்காக எல்லா புஸ்தகங்களையும் சர்க்கார் மொழி பெயர்த்துக்கொண்டு

[Sri N. K. Palanisami] [5th September 1960

வருகிருர்கள். விஞ்ஞான புஸ்தகங்களேக்கூட மொழிபெயர்த்துக்கொண்டு வரு கிருர்கள். அதற்கு அதிக நாட்களாகும் என்று தோன்றுகிறது. அது மட்டுமல்ல. இதற்கு ஏராளமான செலவும் ஆகும். அது மாகாண சர்க்காருடைய பொறுப்பாக இருந்தாலும் அதற்கு வேண்டிய செலவை மத்திய சர்க்காரும் ஏற்றுக்கொள்ள வேண்டும். அதற்கு வேண்டிய நடவடிக்கைகளே இந்தச் சர்க்கார் எடுத்துக்கொள்ள வேண்டும். அந்த அந்த மாகாணத்தில் அந்த அந்த பிரதேச மொழியில் ஆட்சியை நடத்த வேண்டும் என்று சொல்லும் பொறுப்பு அந்த அந்த மாகாணத்தைச் சேர்ந்ததாக இருந்தாலும் அதற்கு ஆகும் செலவை மத்திய சர்க்காரும் ஓரளவு ஏற்றுக்கொள்ள வேண்டியதாக இருக்கிறது. ஆகவே இப்படியெல்லாம் நடவடிக்கை எடுத்துக்கொண்டால் ஆட்சி மொழி அமுலுக்கு வருமேயொழிய இல்லாவிட்டால் அது சட்டத்தில் தான் இருக்குமேயொழிய நடைமுறையில் வருவதற்கு இடம் இருக்காது.

இன்றைக்கு ஹிந்தி பேசக்கூடிய பகுதியிலிருக்கக்கூடிய மக்கள் அங்கே இருக்கக்கூடிய ஹிந்தி மொழியைத் தவிர மற்ற மொழி ஒன்றையும் அவர்கள் கட்டாய பாடமாக எடுத்துக்கொள்ள வேண்டும் என்று மொழிக் கமிஷன் சொல்லி இருக்கிறது. அந்த முறையில் நிறைவேற்றி இருந்தால் எந்த விதமான குழப்பமும் ஏற்பட்டிருக்காது. அது இல்லாமல் இருந்து ஹிந்தி பேசப்படாத பகுதிகளில் இருக்கக்கூடிய மக்கள் மட்டும் தங்களுடைய பிரதேச பாஷையைத் தவிர இதர மொழி ஒன்றையும் கட்டாயமாகக் கற்றுக்கொள்ள வேண்டும் என்று சொன்னதால் தான் தங்களே ஏதோ கீழ் தளத்தில் வைத்திருப்பதாகவும் ஒரு பீதி ஏற்பட்டிருக்கிறது. அதாவது ஹிந்தி பேசப்படாதவர்கள் கீழ்த்தரமாக எண்ணக்கூடிய அளவில் ஒருவிதமான பீதி ஏற்பட்டிருக்கிறது. அப்படிப்பட்ட ஒரு பீதியையும் எண்ணத்தையும் போக்க வேண்டும். ஆகவே ஹிந்தி பேசக்கூடிய பகுதியில் உள்ள மக்களும் ஹிந்தியைத் தவிர இதர மொழி ஒன்றையும் கட்டாயமாக படிக்க வேண்டும் என்ற ஏற்பாட்டைச் செய்ய வேண்டும். அப்படிச் செய்தால்தான் இப்பொழுதுள்ள குழப்பம் ஏற்படாது.

ஆங்கிலத்தினுடைய நிலேமை என்ன என்ற முடிவுக்கு இன்னும் நம்மால் வர முடியவில்லே. இன்றைக்கு இருக்கக்கூடிய நிலேயில் கண்டிப்பாக இந்தக் குழப்பம் நீங்காது. சுமார் 350 வருஷ காலமாக ஆங்கிலம் படித்திருந்தும் கூட எந்த அளவுக்கு மக்கள் அதைப் படித்திருக்கிருர்கள் என்பது நம் எல்லோருக்கும் நன்ருகத் தெரியும். அது இருந்த போது எந்த அளவுக்கு நம்முடைய பாஷை வளர்ந்திருக்கிறது என்பதும் நமக்கு நன்ருகத் தெரியும். சுமார் 350 வருஷ காலமாக ஆங்கிலம் நமது ஆட்சி மொழியாக இருந்த காரணமாக இப்படிப்பட்ட நிலேமை நமக்கு ஏற்பட்டிருக்கிறது. அதைப்பற்றி சர்க்காருடைய மொழிக் கமிஷன் என்ன சொல்லி இருக்கிறது என்ருல்—

"படிக்கும் பிள்ளேகளோ, அல்லது அவர்களின் காப்பாளர்களோ அம் மொழியைக் கற்க விரும்பா விட்டால், ஆங்கிலத்தைக் கட்டாய பாட மாக வைக்க வேண்டியதில்லே என ஏற்பாடு செய்ய வேண்டும். ஆங்கிலம் படிக்க விரும்பாத பிள்ளேகளின் விஷயத்தில், விருப்பப் பாடமாக ஆங்கிலத்தைக் கற்றுத் தருகிற பள்ளிகளில் மற்றெரு மொழியைக் கற்பிக்க வேறு ஏற்பாடு செய்திருக்க வேண்டும். ஆங்கிலத்தை விருப்பப் பாடமாகப் படிக்க விரும்பாத பிள்ளேகளுக்கு அவர்களுடைய தாய்மொழியில் சிறப்புப் படிப்பு கற்றுத் தரவும் ஏற்பாடு செய்திருக்க வேண்டும்"

என்று சொல்லி இருக்கிறது. சர்க்கார் கொள்கை என்ன ?—

"எனினும் ஆங்கிலத்தை விருப்பப் பாடமென்ற முறையில் படிக்க ஏற்பாடு செய்திருப்பது போதுமானதல்ல என்று இந்த அரசினர் உறுதியாக நம்புகிருர்கள். நாட்டு நலனே முன்னிட்டு எல்லா மாநிலங்களிலும் ஆங்கிலம் கட்டாய பாடமாக இருக்க வேண்டும். அது கட்டாய பாடமாக இருப்பது மட்டுமன்றி துவக்க கல்வி நிலேயிலே கூட இதைக் கற்பிக்க வேண்டுமென்றும் அரசினர் கருதுகின்றனர்."

5th September 1960] [Sri N. K. Palanisami]

ஆகவே மொழிக் கமிஷன் ஆங்கிலத்தை கட்டாய பாடமாக வைக்கக்கூடாது என்று சொல்லி இருக்கிறது. ஆனால் நம் சர்க்கார் அது கட்டாய பாடமாக இருக்க வேண்டும் என்று சொல்லி இருக்கிறார்கள். அது மட்டுமல்ல, ஹிந்தி பேசக்கூடிய பகுதிகளில் இரண்டு மொழிகள் பயின்றால் போதும். ஆனால் நம் மாகாணத்தில் பிரதேச மொழி அவசியமாகப் படித்தாக வேண்டும். அது மட்டுமல்ல. மூன்று மொழிகள் படிக்க வேண்டியதாக இருக்கிறது. இன்று தமிழ் மொழி ஆட்சி மொழியாக இருக்கிறது. எல்லாக் கல்லூரிகளிலும் தமிழிலேயே பாடங்களைக் கற்றுக்கொடுக்க வேண்டுமென்ற நடவடிக்கையும் எடுக்கப்பட்டு வருகிறது. அப்படி இருக்கும்போது நாலாவது ஐந்தாவது பாரத்திலிருந்து ஆங்கிலத்தைக் கற்றுக்கொள்ள வேண்டும் என்று சொல்வதில் என்ன அர்த்தம் என்பது தெரியவில்லை. ஒருக்கால் இப்படிச் சொல்வதால் படிப்படியாக ஆங்கிலமே மீடியம் அப் இன்ஸ்ட்ரக்ஷனாக வந்துவிடுமோ என்று கூட தோன்றுகிறது. அது தான் சர்க்காருடைய உத்தேசமா ? கல்லூரிகளில் தமிழில் பாடங்களைச் சொல்லிக் கொடுக்க வேண்டும் என்று சொல்லி விட்டு ஆங்கிலத்தைக் கொண்டு வந்து அதில் பாடங்களை வைப்பதன் அர்த்தம் என்ன என்பது தெரியவில்லை. ஏற்கெனவே ஹைஸ்கூல்களில் தமிழில் படித்துவிட்டு கல்லூரிகளில் ஆங்கிலத்தில் படிக்க வேண்டும் என்று சொல்லும்போது குழந்தைகளுக்கு எவ்வளவு கஷ்டமாக இருக்கிறது என்பது நமக்கு எல்லோருக்கும் நன்றாகத் தெரியும். அந்த நிலைமையில் அவர்களால் கல்லூரிகளில் ஆங்கிலத்தில் நன்றாகப் படிக்கமுடியவில்லை. அது மட்டுமல்ல. கோயம்பத்தூரில் இப்பொழுது ஒரு பைலட் ஸ்கீமை ஆரம்பித்திருக்கிறார்கள், அங்குள்ள கல்லூரியில் தமிழ் மொழியில் பாடங்களை நடத்துவது என்று. அதில் படிக்கக்கூடிய மாணவர்கள் பாஸ் பண்ணிய பிறகு அவர்கள் மேல் படிப்பு படிக்க வேண்டுமானால் அவர்கள் ப்ரொபெஷனல் காலேஜில் படிக்க வேண்டிய வசதி செய்து கொடுக்கப்படுமா ? அந்த அந்த முறையில் அதற்கான மாற்றங்கள் ஏற்பட்டிருக்கிறதா? அதற்கு வேண்டிய நடவடிக்கை எடுக்கப் பட்டிருக்கிறதா ? எல்லா கல்லூரிகளிலும் தமிழ் போதனா மொழியாக இருக்க வேண்டும் என்று அந்தக் கொள்கையை ஒத்துக்கொண்டு அந்த அளவில் அங்கு ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. அதன் பிறகு மேல் படிப்புக்கு வசதி செய்யாவிட்டால் குழப்பம்தான் ஏற்படும். 1948-ம் ஆண்டில் நம்முடைய வைஸ் சான்சலர்கள் எல்லோரும் ஒன்று கூடி இன்னும் ஐந்து வருஷங்களில் எல்லாக் கல்லூரிகளிலும் ஹிந்தி மொழியை நம் மாகாணத்தில் கொண்டு வருவதற்கு ஒத்துக் கொண்டார்கள். ஆனால் கொள்கை அளவில் அதை ஒத்துக்கொண்டால் அதில் இடைஞ்சல் ஏற்படுவதற்கு இடம் இருக்கிறது. நாம் ஆட்சி மொழியை தமிழ் என்று சொல்லி விட்டு அதற்கு வேண்டிய நடவடிக்கை எடுத்துக்கொள்ளும்போது ஏதாவது இடைஞ்சல் இருந்தால் தவிர்க்க, அந்தத் தடங்கலை நீக்க சட்டத்தைத் திருத்த சர்க்கார் தயங்கக்கூடாது. ஏன் தயங்க வேண்டும் ? அரசியல் கொள்கைக்குச் சம்பந்தமாகத்தான் சட்டம் செய்ய வேண்டும் என்று இருக்கிறது. அந்த அளவில் அந்தச் சட்டத்தைத் திருத்தி அமைத்துக் கொள்ளலாம். ஒரு பக்கத்தில் ஆங்கிலத்தைக் கொண்டு வந்து மற்றொரு பக்கத்தில் தமிழ் வளர்ச்சிக்கு ஏற்பாடு செய்யாமல் இருந்தால் அது சரியல்ல. ஆனால் இப்பொழுது சர்க்கார் செய்து வரக்கூடியதைப் பார்த்தால் கொள்கை அளவில் தமிழைக் கொண்டு வருகிறோம் என்று சொல்லிவிட்டு ஆங்கிலத்தைக் கொண்டு வருவதற்கு நடவடிக்கை எடுத்துக் கொண்டு வருகிறார்கள் என்பது வெட்ட வெளிச்சமாகத் தெரிகிறது. ட்ரான்சிஷனல் பீரியடில் 1965-க்கு பிறகு கூட யூனியன் ஆட்சி மொழி ஆங்கிலமாக இருக்கும் என்று சொல்லி விட்டு இந்த மாகாணத்திற்கு தமிழ் தான் ஆட்சி மொழியாக இருக்கும் என்றும் சொல்லி இருக்கிறோம். அப்படி சொல்லிய பிறகு யூனியன் சர்வீஸ் கமிஷன் பரீட்சைகளை எந்த மொழியில் எழுதப்போகிறார்கள் என்பதுதான் தெரியவில்லை. யூனியன் பப்ளிக் சர்வீஸ் கமிஷன் பரீட்சையை எந்த மொழியில் எழுத முடியும்? ஹிந்தி படித்தவர்களைவிட நாம் முன்னேறி இருப்போமா ? அவர்களுக்கு இருக்கக்கூடிய நிலைமை நமக்கு இருக்குமா ? என்பதை நாம் கொஞ்சம் யோசித்துப் பார்க்க வேண்டும். ஆகவே தான் நான் சொல்லுகிறேன், 1965-க்குப் பிறகும் ஆங்கிலம் தொடர்ந்து இருக்க வேண்டும். யூனியன் சர்வீஸ்

[Sri N. K. Palanisami] [5th September 1960

கமிஷன் பரீட்சைகள் எல்லாம் அந்த அந்த பிரதேச மொழிகளில்தான் எழுதப்பட வேண்டும். அப்படி இருந்தால்தான் நியாயம், உண்மையான நியாயமான நிலைமை ஏற்படும்.

இன்னும் மத்திய சர்க்காருடைய உத்தியோகங்களுக்கு சிப்பந்திகளைத் தேர்நதெடுக்கும்போது அந்த அந்த மாகாணத்திலுள்ள ஜனத்தொகை அடிப்படையில் அதற்கு கோட்டா ஒதுக்கி அந்த அளவில் சிப்பந்திகளை தேர்ந்தெடுக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும். அதை மத்திய சர்க்கார் ஏற்றுக்கொள்ளும்படி செய்ய வேண்டும். ஒவ்வொரு மாகாணத்திலும் குறைந்த அளவில் தான் இருக்கிறார்கள் என்றது இல்லாமல் அந்த அந்த மாகாண ஜனத்தொகை அடிப்படையில் எவ்வளவு பேர்கள் தேர்ந்தெடுக்க வேண்டுமோ அந்த அளவில் தேர்ந்தெடுத்து வேலை கொடுக்க வேண்டும். அந்த நிலைமையை ஏற்படுத்த வேண்டும். அம் மாதிரி செய்தால் தான் எந்த மாதிரியான ஆபத்தும் பயமும் ஏற்படாது.

இன்றைக்கு ஸ்டேட் சர்வீஸ் கமிஷனை எடுத்துக்கொண்டால் அந்த பரிட்சையெல்லாம் தமிழில் நடந்தால் என்ன, ஏன் தமிழில் எழுத வசதி செய்து தரக்கூடாது, என்று கேட்க ஆசைப்படுகிறேன். அடுத்த படியாக கோர்ட்டுகளை எடுத்துக்கொண்டால், இன்னும் கீழ்க் கோர்ட்டுகளை எடுத்துக் கொண்டாலும் நடவடிக்கைகள் எல்லாம் ஆங்கிலத்தில்தான் நடைபெறுகின்றன. அப்படி இல்லாமல் அந்த அந்த பிரதேச மொழியில் தான் நடத்த வேண்டும். அதற்கு அதிகப்படியான செலவு ஆகலாம். அந்தச் செலவை மத்திய சர்க்கார் ஏற்றுக்கொள்ள வேண்டும். அதே மாதிரி ஜட்ஜுமெண்ட்கள் எல்லாம் தமிழில் எழுதப்பட வேண்டும். அதே சமயத்தில் ஹிந்தியில் இருப்பவைகளை யெல்லாம் ட்ரான்ஸ்லேட் செய்வதற்கு எல்லா வசதிகளையும் செய்து தரவேண்டும். இன்னும் சுப்ரீம் கோர்ட்டை எடுத்துக்கொண்டாலும் ஆங்கிலம், இந்தி என்ற இரண்டு மொழிகள் இருப்பது மாத்திரம் அல்லாமல் எல்லா மொழிகளிலும் மொழி பெயர்ப்பதற்கு வசதி செய்து தரப்படவேண்டும். அப்போதுதான் மொழி விஷயத்தில் ஜனங்களுக்கு இருக்கக்கூடிய பயம் நீங்கி ஒரு ஐக்கியத்திற்கு வர முடியும். ஆகவே இம்மாதிரி முறையில் சர்க்கார் கொண்டு வந்திருக்கக்கூடிய கொள்கையானது எதிர்க்கட்சிக்காரர்களும் சேர்ந்து ஆதரிக்கக் கூடியதாக இருக்கிறது என்பதனால் இதை நான் ஆதரிக்கின்றேன்.

* Sri V. K. KRISHNAMURTHY : கனம் தலைவரவர்களே, இந்தியாவின் மொழிப் பிரச்னை என்ற தலைப்பில் சென்னை அரசினர் விடுத்துள்ள கொள்கையை கூர்ந்தாராய்ந்த ஞான்று தமிழ் மொழியின் வரலாற்றை அடிப்படையாகக்கொண்டு மொழிப் பிரச்னையை நல்ல முறையிலாராய்ந் திருக்கிறார்கள்.

மொழிவழி தமிழகம் இயங்கத் தொடங்கிய பின்னர் தாய்மொழி—தாய் மொழிக்கல்வி—தாய்மொழி இலக்கியம் மனித நாகரிகத்தின் அடிப்படை என்றுணர்ந்து தமிழ் மொழியைக் கல்வி மொழியாக்கி—அரசியல் மொழியாக்கி—அலுவலக மொழியாக்கி—சட்ட மன்ற மொழியாக்கி—கல்லூரிகளில் பாட மொழியாக்கி—தமிழை உயர்ததி உன்னத நிலையில் வீற்றிருக்க வைத்துள்ள பெருமைக்கு பொதுவாக அமைச்சரவைக்கும் சிறப்பாக கல்வி அமைச்சருக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். தமிழ் மொழி சிறந்தது—உயர்ந்தது—என்றாலும் உயர்ந்த நிலையை இயல்பாகவே அடையாத நிலைக்குரிய காரணம் என்ன ?

தமிழக வரலாற்றிலும்கூட பல மொழிகள் தமிழகத்தில் அரசோச்சின என்ற உண்மையை நம்மாநில மொழிப்பிரச்சனை அறிக்கை கரவாமல்—மூடி மறைக்காமல் விளக்கியுள்ளது.

பாலி மொழி ஆட்சிக்குப் பின்னர், சமஸ்கிருத மொழி ஆட்சிக்குப் பின்னர், பெர்சிய மொழி ஆட்சிக்குப் பின்னர், ஆங்கில மொழி அரசோச்சி வருகிறது. தொடர்ந்து நான்கு மொழிகள் அரசோச்சிய காலத்து சமஸ்கிருதத்தின் தொடர்பும்—துணையும்தான் தமிழை வளர்த்த தென்று புரட்டுவாதத்தைக் கூறுமலில்லை. பிறமொழியின் உதவியினால் தான், பிறமொழியின் ஆதரவினால்தான் வளர்ச்சியடைய முடியும்.

5th September 1960] [Sri V. K. Krishnamurthy]

வளர்ச்சியடைந்திருக்கிறது என்று கூறுமலில்லை. வடமொழி வரலாற்றையும், தமிழ்மொழி வரலாற்றையும் நன்கு ஆராய்ந்து பார்த்தால் உண்மை நன்கு விளங்கும். இருமொழிகளுக்கும் தொடர்பில்லை என்று தாஞகவே நன்கு தெரியும். வடமொழி முக்கூறு வேதகால மொழி—பாஷா மொழி சமஸ்கிருத மொழி. வேதகால மொழிக்கும், பாஷா மொழிக்கும் தனித் தனி இலக்கணங்கள். ஆனல் சமஸ்கிருதத்திற்கோ இலக்கணமே இல்லை. பாஷா மொழியில் படைத்த பாணினீய இலக்கணத்தை சமஸ்கிருதம் ஏற்றுக்கொண்டது. ஆதலால் சமஸ்கிருதத்திற்கே இலக்கணமில்லை : ஆனல் தொல்காப்பியம் என்ற இலக்கணத்தை முதல் சங்க காலமுதல் தமிழ் மொழி பெற்றிருக்க, சமஸ்கிருதத்தால் தமிழ் வளர்ந்தது என்பது ஏற்க முடியாத ஒன்று. என்றுலும் தமிழ் மொழியின் மாண்பை மாய்த் தொழிக்க சதிகள் பல நடந்து முயற்சிகள் பல தொடர்ந்ததெனினும் தமிழ் தனி இலக்கணம், இலக்கியம், சமயம், வரலாறு பெற்று வாழ்ந்து வருவதை வரலாறு விளக்குகிறதென்பதில் ஐயமில்லை. இருமொழிக்கு ஓரிலக்கணமென்று ஈசான தேசிகர் இலக்கணக் கொத்து வரைந்து தமிழோடு கலந்தனர். தனித் தமிழ் நூலுண்டோ என்று அறைகூவி தமிழைத் தாக்கிய கொடுமையைக் கூருமலிருக்கமுடியவில்லை.

தமிழ் மொழிக்கேற்பட்ட இவ்வெதிர்ப்புகளை எதிர்த்து தமிழ் வேறு—சமஸ்கிருதம் வேறு என்று மாதவச் சிவஞான யோகிகள் விளக்கந் தந்தனர். தமிழகத்தில் தமிழ் வாழ நிகழ்ந்த எதிர்ப்புகள் வளர்ந்த வண்ணமாயிருந்தன. 1939-ல் இந்தி புகுத்தப்பட்டபோது மக்களிடையே அனலேற்பட்டது ; இந்தி மொழி சமஸ்கிருதத்தின் கிளைமொழி என்றும், இந்தி பயின்றுல் சமஸ்கிருதம் எளிதில் பயில்வார்களென்றும் பின்னர் ஆரியதர்மத்தைப் பரப்பமுயலும் என்ற கருத்தைக் கூறியதால் தமிழ் நாட்டில் பெரிய கிளர்ச்சி ஏற்பட்டது என்பதைத் தெரிவித்துக்கொள்ளு கிறேன்.

ஆனல் இன்றே நம் அமைச்சர் அவை ஏனைய மொழிகளும் வாழ—பன்மொழி நிரம்பிய நாடாகவே இந்தியா இருக்க வேண்டுமென்றும் எம்மொழி அழிவுக்கும் இடந்தராதவாறு தெளிவையும் விளக்கத்தையும் அனைத்திந்தியாவிற்குத் தந்த பெருமையைப் பாராட்டுகின்றேன். இந்தி தான் அரசோச்சும் என்ற கொள்கையைத் தகர்த்தெறிந்து அந்தந்த மாநிலங்களிலுள்ள மொழிகள் அந்தந்த மாநிலங்களில் அரசோச்சும் என்று வற்புறுத்தி ஏனைய மொழிகளை ஏமமுறவைத்த பெருமை நம் மாநில கல்வி அமைச்சருக்குண்டு. தேசிய மொழிவேறு, அகில இந்திய மொழிவேறு என்று விளக்கந்தந்து இந்தி அகில இந்திய மொழி என்றும் இந்தியோடு ஆங்கிலமும் தொடர்ந்து நீடிக்க வேண்டுமென்றும், மத்திய அரசாங்கத்துக்கு சென்னை அரசாங்கம் அறிவித்தமை மகிழ்ச்சிக்குரியதே.

ஒரு மொழி பிறமொழிகளின்மீது ஆட்சி செலுத்தாமல் ஏனைய மொழி களும், பண்பும், நாகரீகமும், இனமும் வளர நம் அமைச்சர் அவை நல்ல கொள்கையை வகுத்தளித்தமை தமிழகத்திற்கே நிலைத்த பெருமை. அதே நேரத்தில் தமிழ் மொழி வளர்ச்சியடைய வேண்டுமென்றுல் என்னென்ன செய்தல் வேண்டுமென்ற ஆராய்ச்சி பிறக்கிறபோது பிறமொழி கலந்தால்தான் தமிழ் வளரும், இல்லாவிட்டால் தமிழ் வாழாது என் கின்ற கருத்து மேலோங்கி வருகிறது. தமிழ் மொழியின் வாழ்வும் தாழ் வும் ஒரு தலைமுறையைச் சார்ந்ததில்லை. ஆயிரமாயிரமாண்டுகளாகத் தமிழ்மொழி நின்று நிலவிவந்திருக்கிறது. தமிழக வரலாற்றிலே ஏனைய மொழிகள் அரசியல் அதிகாரம் பெற்று—சமய அதிகாரம் பெற்று—மொழி அதிகாரம் பெற்று—ஓங்கி நின்ற காலத்திலும்கூட தமிழ் பிற மொழி ஆதிக்கத்தால்—பிற இனத்தர் ஆதிக்கத்தால் அழிந்தொழிந்து போகாமல் தன்னிலையில் தனித்து நின்று வாழ்ந்திருக்கிறது என்பதைப் பார்க்கிறபொழுது, பிற மொழி கலப்பில்லை என்றுல் தமிழ்வாழாது என்ற கருத்துக்கே இடம் கிடையாது என்பதை முடிந்த முடிபாக நான் தெரிவித்துக்கொள்ளுகிறேன். தனித்து நின்று வாழ்ந்ததன் காரண மாகத்தான்—அந்தத் தன்மை அதன் உயிர்ப்பண்பாக நின்ற காரணத்

திஞல் தான் காலம் கடந்த மொழியாக அது இன்றும் நின்று நிலவு கிறது. இந்த முறையை ஆராய்ந்து பார்க்கிறபொழுது அதனுடைய தனித் தன்மையை இழித்துரைக்கும் முயற்சி அந்தக் காலத்திலும் இல்லாம லில்லை. முருகனை ஆற்றுப்படுத்திய நக்கீரர் காலத்தில் "ஆரியம் நன்று—தமிழ் தீது" என்று சொல்லப்பட்டதே. இன்று தமிழ்மொழியை ஆட்சி மொழியாகவும், கல்லூரி மொழியாகவும், அரசியல் மொழியாகவும் உயர்த்திய புரவலர் திரு. சி. சுப்பிரமணியம் காலத்திலும் ஆங்கிலம் நன்று என்றுதான் கூறப்படுகிறது. பிறமொழி கலப்பால் தமிழ் வளராது என்ற தற்கு ஆன்ற சான்றைக்கூறுகின்றேன். தமிழ் மொழிவளர்ச்சி—இலக்கண வளர்ச்சி—இலக்கிய வளர்ச்சி பிறமொழிக் கலப்பால் தாழ்வுறும்— அழிவுறும்—

சங்க காலத்தில் 500 சொற்களுக்கு 2 வடமொழிச் சொற்கள்.
பட்டினப்பாலையில் 100 சொற்களுக்கு 2 வடமொழிச் சொற்கள்.
திருவாசகத்தில் 100 சொற்களுக்கு 7 வடமொழிச் சொற்கள்.
திருக்கோவை 300 சொற்களுக்கு 1 வடமொழிச் சொல்.
மணிமேகலையில் 100 சொற்களுக்கு 5 வடமொழிச் சொற்கள்.
தேவார காலத்தில் 100 சொற்களுக்கு 10 வடமொழிச் சொற்கள்.

கி.பி. 10-ம் நூற்றுண்டில் 100 சொற்களுக்கு 30 சதம், 40 சதம், 50 சதம், 60 சதம் புகுந்தன. ஆதலால் சிலப்பதிகாரம் பிறந்த சேரநாடு கண்ணகி வீடுபேறெய்திய சேரநாடு—வடவர் மீது படை எடுத்த சேரநாடு— இன்று தமிழ் நாடாக இல்லாமல் மலையாள நாடாக இருப்பதே காரணம்— தமிழ் மறைந்து மலையாளமொழி மலர்ந்ததின் காரணம் பிறமொழி நுழைவே. ஓர் இலட்சம் தமிழ்ப் பாடல்கள் பாடிய மகாவித்துவான் மீனுட்சிசுந்தரம் பிள்ளை ஊழியும்—மறைமலை அடிகளின் தனித்தமிழ் ஊழியும் தமிழர்கட்கு வழிகாட்டிகளாய் விளங்குகின்றன. "கடிசொல் இல்லை காலத்துப்படினே" என்ற தொல்காப்பியர் வாக்கு கலைச்சொற்களை (மூலசொற்களை) ஏற்று மொழி வளர்ப்போம்.

கூட்டு இந்தியாவா அல்லது வெட்டு இந்தியாவா ? கூட்டு இந்தியா விற்கு ஒரு அனைத்திந்திய மொழி இன்றியமையாதது. அது இந்தி. இதை விருப்பப்பாடமாக வைத்து யாவரும் இப்பாகப் படிக்க வழி வகை செய்வதில் கீழ்க்கண்ட முறையைக் கையாளுவோமாக. இந்தித் தேர்வில் "தகுதி பெறுவதற்குரிய" விஞத்தாளாக இருக்கவேண்டுமே யன்றி "ஒரு போதும்" தேர்வு எழுதுபவர்களுள் போட்டி உணர்வை ஏற்படுத்தக்கூடியதாக அமையக் கூடாது. வெட்டு இந்தியாவுக்குரியவர் களுக்கு பொதுமொழி என்ற பேச்சே இல்லை.

12-00 noon.

அரசினரின் மொழிக்கொள்கையை முழுதும் ஆதரித்துப் பாராட்டு கிறேன்.

**Sri K. R. NALLASIVAM :** கனம் மன்றத் தலைவர் அவர்களே, முதலிலே மொழிப்பிரச்சனையில் காந்திஜி அவர்கள் என்ன சொல்லியிருக் கிருரோ அதைப்பற்றி இரண்டொரு வார்த்தைகள் சொல்லிவிட்டு, அதற்குப் பின் நம் முன்னுல் இருக்கும் விஷயத்தைப்பற்றிக் குறிப்பிட விரும்பு கிறேன் இன்றைக்கு ஆட்சியாளர்கள் தங்களுடைய ஒவ்வொரு நடை முறைப்பற்றியும் வெளியே சொல்லுகிற தத்துவங்கள் அதற்கு ஆதாரங்கள் காட்டும்போது காந்திஜீ அவர்களுடைய பிரசங்கத்திலிருந்து, காந்திஜீ அவர்களுடைய நடைமுறையிலே இருந்து எடுத்துக் காட்டிக்கொண்டிருக் கிருர்கள். ஆனல் அதே நேரத்தில் மொழித் துறையைப் பொறுத்த வரையில் காந்திஜீ அவர்கள் வழியை முழுக்க முழுக்க இன்றைய ஆட்சி யாளர் கிட்ட நெருங்குவதே கிடையாது, புறக்கணித்து வருகிருர்கள். ஆட்சேபித்திருக்கிருர்கள், கொஞ்சம்கூட கவலைப்படவில்லை.

பிராந்திய மொழிதான் ஆட்சிமொழியாக இருக்க வேண்டுமென்று ஒவ்வொரு இடத்திலும் அவர்கள் கூறுகிருர்கள். அடுத்தபடியாக பொது மொழி என்ற பிரச்னை வருமானல் அதற்கும் காந்திஜீ ஒரு வழி கூறு

5th September 1960] [Sri K. R. Nallasivam]

கிறர்கள். அதையும் ஞாபகப்படுத்த விரும்புகிறேன். அந்தந்த பிராந்தியத்தில் அந்தந்த மாநில மொழியை உடனடியாக ஆட்சிமொழியாக்கி விட்டால் மாநில மொழிகள் ஒழுங்காக பயன்பெறக்கூடிய நிலை விரைவிலே உருவாகும். அதன் மூலம் அந்தந்த மாநிலங்களிலும் உள்ள மொழிகள் வளர்ச்சியுறும்போது நிச்சயமாக பொதுமொழி தன்போக்கிலே உருவாகும் என்று தெளிவாக கூறியிருக்கிறர்கள்.

(Mr. Speaker in the Chair.)

ஆட்சிமொழி கமிஷன் தங்களுடைய ரிபோர்ட்டிலே இதைக் குறிப்பிட்டிருக்கிறர்கள். அந்த அடிப்படையிலே பார்க்கும்போது, மொழிப்பிரச்சனையிலே நம் கவனம் வேறுபக்கமாக திருப்பப்பட்டிருக்கிறதே தவிர, இந்த ராஜ்யத்தில் தமிழ் எந்த அளவில் இருக்கிறது, அதை உருவாக்க இந்த சர்க்கார் எடுத்துக் கொண்டிருக்கும் நடவடிக்கை தீவிரத் தன்மையாக இருக்கிறதா, அதைக் காப்பாற்றக் கூடியதாக இருக்கிறதா என்பதைப் பார்த்தால், இல்லை என்றுதான் சொல்ல வேண்டும். ஒரே ஒரு கல்லூரியில், கோவையில் தமிழை போதனு மொழியாக ஆக்க முயற்சி எடுத்துக் கொண்டிருக்கிறர்கள். சுதந்திரம் கிடைத்த 13 ஆண்டுகளுக்குப் பின் தமிழையோ அல்லது பொது மொழியாகிய இந்தியையோ வளர்ப்பதற்கு எடுத்துக்கொண்டிருக்கும் நடவடிக்கை மிக மிகக் குறைவு. காந்திஜீ அவர்கள் குறிப்பிட்டதுபோல் பிராந்தியமொழி வளருமானுல், தன் போக்கிலே பொதுமொழி நிச்சயமாக உருவாகிவிடும். அந்த அடிப்படையிலே தான் தாய் மொழியிலே எல்லாவற்றையும் நடத்தும் முறையில் 13 ஆண்டுகளாக இன்றைய ஆட்சியாளர் எந்த அளவிற்கு நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறர்கள் என்று பார்த்தால் சந்தேகக் கண்ணேட்டத்தோடுதான் பார்ப்பதாக இருக்கிறது. அறிவாளர்கள் என்று சொல்லக் கூடிய மற்றும் ஒரு சாரார் இருக்கிறர்களே அவர்களுக்கு ஆங்கிலம் போய்விட்டால் எல்லாம் அழிந்துவிடும் என்ற பயம் இருக்கிறது. ஆனுல் உண்மையிலே அந்த பயம் ஆட்சியாளர்களிடத்தில்தான் இருக்கிறதென்று தெளிவாக நான் குற்றம் சாட்ட விரும்புகிறேன். நாளாவட்டத்திலே, பிராந்திய மொழி அல்லது நாட்டிலே இருக்கும் மொழிகள், வளர்ச்சி பெற்று ஆங்கிலம் இருக்கும் இடத்தில் இருக்கவேண்டுமென்று ஒவ்வொருவரும் கூறுகிறர்கள். நான் ஒரே ஒரு கேள்வி கேட்க விரும்புகிறேன். நம்முடைய பிராந்திய மொழி என்றைக்குத் தான் வளர்ச்சி உறும் என்று நீங்கள் நம்புகிறீர்கள். அதற்கும் காலகட்டம் உண்டு. ஆட்சியாளர்களுக்கும், மற்றும் அந்தக் கொள்கையை எதிர்க்கக் கூடியவர்களுக்கும் ஒன்று சொல்ல விரும்புகிறேன். பிராந்திய மொழி சகல இடங்களிலும் பொறுப்பிலே வந்தால்தான் நிச்சயமாக வேகமாக அது விரைவிலே உலகில் மற்ற மொழிகள் வளர்ச்சி அடைந்திருக்கும் அளவிற்கு வளர்ச்சி அடைய முடியும். தமிழுக்குப் போதுமான சக்தி கிடையாது என்று சொல்லுகிற வரையில் அதை ஆட்சிபீடத்தில் ஏற்றுவிக்காத வரையில் அது எப்படி வளர முடியும்? தந்தை தன்னுடைய மகன் வளர்ந்துவிட்ட பிறகு, பொறுப்பை அது விவசாயத் துறையாகயிருந்தாலும் சரி, வியாபாரத் துறையாகயிருந்தாலும் சரி ஒப்படைக்காமல் "நீ சிறு பிள்ளையாக இருக்கிருய். நீ வலுவில்லாமல் இருக்கிருய், போதிய சக்தியில்லாதவனுக இருக்கிருய்" என்று சொல்லி பொறுப்பைக் கொடுக்காமல் இருப்பதுபோல் இன்றைய ஆட்சியாளர்கள் தமிழ் மொழிக்கு சக்தி இருக்கிறதா என்பதிலே சந்தேகம் இருக்குமானுல் எப்படி அதை நிறைவேற்ற முடியும்? எப்படியாவது பொறுப்பை ஒப்படைத்து விட்டால் முதலில் சங்கடங்கள் ஏற்படத் தான் செய்யும். தமிழ் பிராந்திய மொழியாக பூராவும் ஒப்புக்கொண்டு விட்டால் இரண்டொரு ஆண்டுகளுக்கு தத்தித் தடுமாறும். பிறகு 4, 5 ஆண்டுகளுக்குள் அது தன்னுடைய இடத்தைப் பிடித்து விடும் என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும்.

மொழி விஷயத்தில் எத்தனையோ அரசியல் கட்சிகள் அவர்கள் போக்கிலே போகிறர்கள். ஆங்கிலம் இல்லாவிட்டால் என்ன ஆகும் என்று சிலருக்குப் பயம் ஏற்படுகிறது. அரசாங்கத்திற்கும் இந்த பயம் இருக்கிறது.

இந்த மொழி விஷயத்தில் குழப்பங்களுக்கெல்லாம் காரணம் இன்றைய ஆட்சியாளர் கொள்கைதான். அவர்கள் தெளிவாக அறிக்கைப்படி கொள் கையை ஏற்று மொழிப் பிரச்னையை எடுத்துக்கொண்டிருந்தால், நிச்சய மாக வங்காளத்திலே, அஸ்ஸாமிலே, ஏன் தமிழ் நாட்டிலேகூட கிளர்ச்சி யைப் பார்த்திருக்க முடியாது. அரசாங்கத் தரப்பினரிடத்தில் ஏற்பட்டிருக் கும் சந்தேகங்கள், குழப்பங்கள்தான் அதற்குக் காரணம். எதிர்க்கட்சினர் களைப்பார்த்து அவர்கள் குழப்பிக் கொண்டிருக்கிறார்கள் என்று சொல்ல லாம். ஆனால் அரசாங்கத்தரப்பிலேதான் மொழி விஷயத்தில் பலவீன மாகவும், கோழைத்தனமாகவும், பேடித்தனமாகவும் கொள்கை கையாளப் படுகிற வரையில் நிச்சயமாக மொழிப் பிரச்சனை தீரப்போவதில்லை. சர்க்கா ருடைய கொள்கையைத் தெளிவாக்கிக் கொள்ளவேண்டும்.

THE HON. SRI P. KAKKAN : "பேடித்தனம்" என்ற வார்த் தையை கனம் அங்கத்தினர் அவர்கள் சொன்னது அழகாக இல்லை. இம்மாதிரி சொல்வது சரிதானா என்று அறிய விரும்புகிறேன்.

MR. SPEAKER : "பேடித்தனம்" என்ற வார்த்தையை இந்தச் சபையில் உபயோகப்படுத்தக்கூடாது. கனம் அங்கத்தினர் இதை வாபஸ் பெறவேண்டும்.

SRI K. R. NALLASIVAM : நான் மேற்படி வார்த்தையை வாபஸ் பெறுகிறேன்.

மொழித்துறையில், பொதுவாக ஒவ்வொன்றாக வருகிற அறிக்கை களைப் பார்த்தால் சர்க்காரின் தெளிவற்ற போக்கைத் தெரிந்து கொள்ள முடியும். மத்திய அரசாங்கமானாலும் சரி அல்லது மாநில அரசுகளானா லும் சரி அரசியல் சட்டத்தைப் பரிபூர்ணமாக கருத்தில்கொண்டு அதை நடைமுறையில் உருவாக்க வேண்டுமென்ற உற்சாகமும், உத்வேகமும் இருந்தால் நிச்சயமாக மொழித்துறையில் இந்தக் குழப்பம் ஏற்பட்டிருக்க வேண்டிய அவசியம் இராது. சில நாட்களுக்கு முன்பு நிதியமைச்சர் அவர்கள் சொன்னதாக ஞாபகம், இங்கு சொன்னார்களோ அல்லது வெளியில் சொன்னார்களோ தெரியவில்லை. ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பாக உயர் நீதி மன்றத்தில் தமிழில்தான் தீர்ப்புகள் வழங்கப்பட்டன என்று அவர்கள் சொன்னதாக ஞாபகம். பொதுவாக, நம் மொழியைப் பொறுத்தவரையில் நாம் உபயோகப்படுத்த ஆரம்பித்தால் நிச்சயமாக நமக்கு வார்த்தைகள் எல்லாம் கிடைக்கும். அல்லது வார்த்தைகளை நாம் தேடிக்கொள்ள முடியும். வார்த்தைகள் இல்லை என்று சொல்வதற்கும் அல்லது வேண்டிய சாதனங்கள் இல்லை என்று சொல்வதற்கும் வித்தியா சம் உண்டு. வேண்டிய தமிழ் டைப்ரைட்டர்கள் இல்லை. தமிழில் வார்த் தைகள் கிடைப்பது கஷ்டமாக இருக்கிறது என்று சொல்வதைப் புரிந்து கொள்ள கஷ்டமாகயிருக்கிறது. தமிழில் வார்த்தைகளை உருவாக்குவதற்கு நாம் மிகக் கஷ்டப்பட வேண்டியதில்லை. அதற்கு வேண்டிய புலவர்கள், பண்டிதர்கள் நம் நாட்டில் இருக்கிறார்கள். அவர்களுக்கு ஆக்கம் கொடுத் தால் தமிழில் வார்த்தைகளை, மக்களுக்குப் புரியும்படியான வார்த்தைகளை அவர்களால் சுலபமாக உருவாக்க முடியும். அடுத்தபடியாக, பொது மொழியைப் பொறுத்த வரையில் நாம் பெரிதாக பயப்பட வேண்டிய அவசியமில்லை. நிச்சயமாக தேச பக்தியுள்ள எவனும் இதை மறுக்க முடியாது. இந்த நாட்டிலுள்ள ஒரு மொழிதான் பொது மொழியாக இருக்க வேண்டும் என்பதை—அது தமிழாக இருக்கலாம், மலையாளமாக இருக்கலாம் அல்லது தெலுங்காகயிருக்கலாம்—இந்த நாட்டிலுள்ள ஒரு மொழிதான் அதிகார பூர்வமான பொது மொழியாக இருக்க முடியுமே தவிர வெள்ளையர் நம்மை நூறு ஆண்டுகள் ஆண்டார்கள், 150 ஆண்டு கள் ஆண்டார்கள் என்பதற்காக அந்த அடிப்படையில் நாம் ஆங்கிலத்தை வைத்துக் கொண்டிருக்க முடியாது. அந்த மொழியில் எல்லாச் சிறப்பு களும் இருக்கின்றன என்று சொன்னால், அந்த மொழி உலகத்திலுள்ள எல்லா மொழிகளிலுள்ள வார்த்தைகளையும் சேகரித்து வைத்துக் கொண் டிருக்கிறது. நேற்றுகூட பார்த்தேன், இந்தி மொழியிலிருந்து 2,000 வார்த்தைகளை ஆங்கிலம் எடுத்துக் கொண்டிருக்கிறது என்பதை. இலக்கிய வளம் அல்லது இலக்கண வளம் இல்லாத மொழியாகவே இந்தியை

5th September 1960] [Sri K. R. Nallasivam]

வைத்துக் கொள்வோம். அதில் முழு நம்பிக்கைக் கொண்டால், 10, 20 ஆண்டுகளில் அது சுய வளர்ச்சி பெற்ற மொழியாக நிச்சயம் திகழ முடியும். அதே வேளையில் இன்னொன்று நான் இங்கு குறிப்பிட விரும்புகிறேன். மத்திய அரசாங்கமானாலும் சரி அல்லது மாநில அரசுகளானாலும் சரி ஒரு விஷயத்தை தெளிவுபடுத்திக் கொள்ள வேண்டும். நமது மாநில அரசைப் பொறுத்த வரையில் ஒரு விஷயத்தை தெளிவாகச் சொல்லியிருக்கிறார்கள். தேசீய மொழி என்பது வேறு, இணைப்பு மொழி என்பது வேறு என்று ஆட்சி மொழிக் குழுவிடம் குறிப்பு கொடுத்திருப்பது மகிழ்ச்சிக்கு உரியதாகும். 14 மொழிகளும் இந்த நாட்டின் தேசீய மொழிகளாகும் என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். பொது மொழி என்று சொல்லும்போது, அதை எப்படி உபயோகிக்க வேண்டுமென்று பார்த்தால், மத்திய அரசாங்கத்தினோடு கடிதப் போக்குவரத்து வைத்துக் கொள்ள அதை வைத்துக்கொள்ள வேண்டும். உயர் நீதி மன்ற மொழி எதுவாக இருக்க வேண்டுமென்று வரும்போது, அதற்கும் தெளிவான வழியிருக்கிறது. ஆனால் பர்லாங் கல்கள், போக்குவரத்து, ரோடுகளில் ஊர்களின் பெயரைப் போடுதல், மணி ஆர்டர் பாரம்ஸ், கார்ட்டுகள் இவைகள் இந்தியில் இருக்க வேண்டுமா என்பதைப் பொறுத்த வரையில் நாம் தெளிவாக முடிவு செய்து விடலாம், நிச்சயமாக அது தேவையில்லை என்று. பிராந்திய மொழியில் அது குறிக்கப்பட வேண்டும். திரு. அன்பழகன் அவர்கள் கொடுத்திருக்கக்கூடிய திருத்தத்தில்கூட, இந்தியாவிலுள்ள மொழிகளில் ஒரு மொழி வளர்ச்சி பெற்று ஆங்கிலத்தின் இடத்தைப் பிடிக்கும் வரையில் ஆங்கிலம் இருக்க வேண்டுமென்று குறிப்பிட்டிருக்கிறார்கள். அப்படியானால் அவர்களும் கூட இந்த நாட்டிலுள்ள ஒரு மொழி வளர்ச்சி பெற்று அந்த இடத்தைப் பெற முடியும் என்று நம்புகிறார்கள். நான் சர்க்கார் பகுதியில் உள்ளவர்களையும் மற்றவர்களையும் கேட்டுக் கொள்கிறேன், இந்தி மொழியை ஆட்சி பீடத்தில் ஏற்றி வைத்தால் ஆங்கிலத்தை விட வேகமாக, ஆங்கிலத்தை விட சிறப்பான முறையில் இந்த மொழியைக் கொண்டு வர முடியும். ஆகவே நான் சர்க்கார் தரப்பினரையும் சரி, மற்றவர்களையும் சரி கேட்டுக் கொள்கிறேன், நாம் நம் மொழிகளில் நம்பிக்கை வைக்க வேண்டும். அடுத்தபடியாக, ஹைக்கோர்ட்டில் தமிழை வைப்பதா அல்லது இந்தியை வைப்பதா என்று வரும்போது நிச்சயமாக மாநில அளவிலுள்ள சகல பகுதிகளிலும் தமிழ் தான் இருக்க வேண்டும். இந்தி என்பது தொடர் மொழியாக இருக்க வேண்டுமே தவிர, சட்ட மன்றத்தில், ஹைக்கோர்ட்டில், அல்லது சந்தேகத்திற்குரிய எந்தயிடத்திலும், எந்தப் பகுதியிலும் இது இருக்கக்கூடாது. பொது மொழி என்ற அடிப்படையில் அதை ஏற்றுக் கொள்வதற்கு யாரும் தயக்கம் காட்டுவதற்கில்லை. அன்று காந்தியடிகள் குறிப்பிட்டதுபோல் பிராந்திய மொழிகளை ஒழுங்காக வளர்த்தால் பொது மொழிப் பிரச்னை தீர்ந்து விடும். ஆட்சி மொழிச் சட்டத்தை இயற்றி விட்டதாக சர்க்கார் சொல்கிறார்கள். எந்த வருடத்திற்குள் தமிழ் கல்லூரிகளில் போதனா மொழியாக வரும், எந்த வருடத்திற்குள் தமிழ் ஹைக்கோர்ட்டில் பொது மொழியாக வரும், எந்த வருடத்திற்குள் தமிழ் முழுக்க இந்த சட்ட மன்றத்தில் அதிகாரப் பூர்வமான மொழியாக வரப்போகிறது என்பதைத் தெளிவாக எடுத்துரைக்க வேண்டுமென்று அரசாங்கத்தைக் கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

SRIMATHI A. SUARES: Mr. Speaker, Sir, I wish to make a few observations on the topic under discussion to-day, viz., the Language Policy of the Country.

Article 343 of the Constitution states categorically that the official language of the Union shall be Hindi in Devanagiri script. It also states that for a period of 15 years from the commencement of the Constitution the English language shall continue to be used for all the official purposes of the Union. The President has given power to authorise the use of the Hindi language in addition to the English language during the said period of 15 years.

[Srimathi A. Suares] [5th September 1960

Ten years ago, the year 1965 seemed a long way off but with the passing of the last decade 1965 has come very much nearer to us. What is the progress made in the non-Hindi speaking States in the study of Hindi? Ten years ago Hindi was introduced in our high schools as a third language for a period of three years in Forms I to III in S.S.L.C. Schools and Standards VI to VIII in Anglo-Indian schools. This study was not compulsory and a failure in Hindi did not debar a pupil from being promoted to the next higher class. Gradually this arrangement was dropped in most schools and little or no progress was made.

In the present re-organized scheme of Secondary Education the three language formula has been introduced again but with a differance. This time Hindi will be taught in the last three years of the High School course, viz., Standards VIII, IX and X and the S.S.L.C. examination as well as the Anglo-Indian High School examination will include a paper in Hindi besides the regional language. One reason why sufficient progress has not been made in the study of this language is the inefficient way in which it is taught. Perhaps the teacher does not know sufficient Hindi himself or he does not know the correct method of teaching. We notice that progress is very slow. Often only a few lessons in the text book are taught for the year. It should be taught as a living language and not as a dead language like Latin. Facilities should be provided for the training of Hindi teachers and a sufficiently high minimum of general education should be fixed. Adults find it very difficult to learn a new language but the young generation that is in school to-day can master languages easily.

Being aware of the difficulty in mastering a language that is not spoken in the South there has been agitation to defer the enforcement of the provision under Article 343. But in the Lok Sabha the Prime Minister has given an assurance that Hindi will not be enforced on the non-Hindi speaking States until such time as they themselves desire or are prepared for the change-over.

President Prasad, during his recent visit to Madras gave an assurance that no language would be forced on the South. It appears now that the supporters of Hindi in the country now realise that they must have the goodwill of the non-Hindi speaking people in any further policy relating to the official language. The Union Home Minister announced in the Lok Sabha that shortly an amending Bill would be brought before the House for the extended use of English beyond 1965. This does not mean that the study of Hindi should be shelved in the South. Though the time-limit is extended indefinitely, a start must be made sooner or later. I feel that the students now studying Hindi in VIII Standard will be the nucleus of the southerners who will learn the language. In 1963, there will be about 70,000 S.S.L.C. students and 1,000 Anglo-Indian school students who would have studied Hindi for three years and appeared for public examination in this subject. When they have passed the High School and College classes,

5th September 1960] [Srimathi A. Suares]

if they desire to enter the All-India Services, they will study Hindi still further and be competent to serve the Central Government in any part of India.

When discussing the language policy, the place of English should also be considered. In Article 343, provision is made for the use of English for all the official purposes of the Union till 1965. In August 1959, when a non-official resolution moved by the Leader of my community relating to the inclusion of English in the VIII Schedule of the Constitution was debated in the Lok Sabha, the Prime Minister stated that English will continue as an additional or associate language for an indefinite period. He also said that English would continue as an alternative language so long as people require it. He would leave the decision in regard to this matter to the non-Hindi speaking people and not to the Hindi-speaking people. We know that English has an important place for retaining contact with the scientific and technological world. India is now taking great strides in heavy industries in its Five-Year Plans and to carry out these plans, India must move with foreign countries to secure aid —both financial and technical. Without a sound knowledge of English, such contacts will be impossible. English will also be necessary for communication between the Centre and the States and for inter-States communication for many more years till Hindi is developed sufficiently to replace English.

With the assurances from the Prime Minister as well as the President, there is no need for agitation either against Hindi or English. In a calm atmosphere, both these languages should be studied for internal use as well as to communicate with the countries of the world.

The third language in the policy though mentioned by me last is not the least important and that is the regional language. The Madras Government has already declared that Tamil is the State language. In January 1958, about 2,000 officers changed over from English to Tamil. A Pilot Scheme has been introduced in the Coimbatore Arts College, making Tamil the medium of instruction and from 1963 this change will be introduced in other colleges in the State. Steps are being taken to raise the standard of Tamil in the State. While steps are being taken for the promotion, dissemination and progress of the regional languages, care should be taken to avoid the spread of regionalism. The unity of India comes foremost and every citizen of India should try to strengthen this unity by making language and caste subordinate to matters concerning the unity of the country. If there is unity, our country can not only plan developmental schemes and carry them out successfully, but also face any danger on the borders of our country.

So, let us give the three languages their rightful places—Hindi as the language prescribed to be the official language of India, English as an associate language and the regional language in each

[Srimathi A. Suares] [5th September 1960

State, for all purposes within the State. There must be a proper balance maintained between these three languages. Knowledge of Hindi alone will cut us off from other countries in the world. Knowledge of English alone will cut us off from our fellow-country-men in this country. Knowledge of Tamil alone would cut us off from other countries in the world and not to speak of parts of India. So, my plea is that a correct balance should be maintained between these three languages and all the three languages should be studied.

SRI A. VEDARATHNAM : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மொழி விஷயத்தில் நம்முடைய அரசாங்கம் எடுத்திருக்கின்ற நிலையை ஆதரிக்கும் முகத்தான் நான் சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். நம்முடைய அரசியல் சட்டம் அந்தந்த மாகாண நிர்வாகம் அனைத்தும் அந்தந்த மாநில மொழியிலேயே நடக்கவேண்டுமென்று முடிவு செய்திருக்கின்றது. இதுவரையிலும் நம்முடைய தாய் மொழிக்கு இந்த வாய்ப்பு இருந்ததில்லை. அந்த வாய்ப்பை இப்போது அரசியல் சட்டம் நமக்கு தந்தமைக்கு நாம் மிகவும் அவர்களுக்குக் கடமைப்பட்டிருக்கிறோம். இதனால் இந்த மாநிலத்தில் இருக்கின்ற நிர்வாகமும் தமிழ் மொழியில் நடக்க வேண்டும் என்பதில் யாருக்கும் எந்த விதமான ஆட்சேபணையும் இருக்க முடியாது. ஆனால் அனுஷ்டானத்தில் வருதவற்குத்தான் கொஞ்சம் கால தாமதம் ஏற்படுமே தவிர வேறு ஒன்றுமில்லை. ஒவ்வொரு மாநில மொழியிலும் மத்திய அரசாங்கத்திலுள்ள நிர்வாகம் நடக்கவேண்டும் என்று சொன்னால் அது முடியாத் காரியம் என்பதை இந்த மொழிப் பிரச்னையில் அபிப்பிராயபேதம் உள்ளவர்கள் கூட ஏற்றுக்கொள்ளக்கூடும். நமது தேசிய மொழிகளாயிருக்கின்ற 14, 15 மொழிகளிலும் மத்திய அரசாங்கத்தின் நிர்வாகம் நடக்கவேண்டும் என்றால் அது ஒருக்காலும் சாத்தியமில்லை. எனவே தான் 15 ஆண்டுகள் அவகாசம் கொடுத்து அதற்குப் பின்னால், மத்திய அரசாங்கத்தினுடைய நிர்வாகம் இந்தி மொழியில் நடக்கவேண்டும், ஏனென்றால், இந்தி மொழி இந்த பாரத நாட்டில் மிகப் பெரும்பான்மையான மக்களால் பேசப்படுகிறது, அது மட்டுமல்ல, மகாராஷ்டரம், குஜராத், வங்காளி, பஞ்சாபி போன்ற ஏனைய மொழி பேசுகின்றவர்களுக்கும் இந்தி நன்றாகப் பேசத் தெரியும், இந்தியை நன்றாகப் புரிந்து கொள்ள முடியும் என்ற காரணத்தாலும்தான் இந்தி மொழி ஆட்சி மொழியாக இருக்கவேண்டும் என்று ஏற்பாடு செய்திருக்கின்றார்கள். அதற்கான காலவரையறை 1965-ம் ஆண்டு என்று அவர்கள் நிர்ணயித்திருக்கின்றார்கள். ஆங்கிலமும் இந்தியும் தொடர்ந்து மத்திய அரசாங்க மொழியாக இருந்து வரும். அதற்குப் பிறகு இந்தி மட்டும் ஆட்சி மொழியாக இருந்து வரவேண்டுமா அல்லது இப்போதிருப்பது போன்று ஆங்கிலமும் தொடர்ந்து இருந்து வரவேண்டுமா என்பதுதான் முக்கியமான பிரச்னை. இந்தப் பிரச்னையில் நம்முடைய தமிழகத்தைத் தவிர வேறு எந்த மாநிலமும் இந்த மாதிரி ஆங்கிலமும் தொடர்ந்து இருந்து வரவேண்டுமென்பதை வற்புறுத்தவில்லை. அவ்வாறு சொல்ல வேறுயாரும் முன்வரவில்லை. நம்மோடு இணைந்திருந்த சமயத்தில் ஆந்திரம், கேரளம், கர்நாடகம் ஆகிய பகுதிகளிலும் இந்தி கட்டாயமாகக் கூடாது என்று சொல்லி வந்தார்கள். இப்போது நம்மிடமிருந்து பிரிந்து போனவுடன் அவர்கள் மாகாணத்திலே இந்தியைக் கட்டாய மொழியாக ஆக்கிக் கொண்டிருக்கிறார்கள். கர்நாடகத்தில் இன்றைக்கு அரசாங்க உத்தியோகத்தில் இருப்பவர்கள் எல்லாம் "மத்திமா" பரிட்சை பாஸ் பண்ணினால்தான் தொடர்ந்து அரசாங்கம் உத்தியோகத்தில் இருக்க முடியும். அவ்வாறு பரிட்சை பாஸ் பண்ணவில்லையானால் மாநில அரசாங்கத்திலே கூட அவர்களுக்கு உத்தியோகம் இல்லையென்ற நிலையை ஏற்படுத்தி அவ்வளவு துரிதமாக அங்கெல்லாம் இந்தி மொழியைப் படிப்பதில் ஊக்கமூட்டியிருக்கிறார்கள். அகில இந்தியாவில் நம்முடைய மாகாணம் ஒன்றுதான் இந்த மொழிப் பிரச்னையில் மத்திய அரசாங்கத்தோடு வேறுபட்டு இருக்கிறார்கள் என்பதை நான் இங்கே குறிப்பிட விரும்புகிறேன். இன்றைக்கு இந்த அவையில் இருக்கும் அத்தனை கட்சிக்காரர்களும், ஒரு கட்சியாரைத் தவிர அதற்கு எதிர்ப்புக்

12-30 p.m.

காட்டவில்லை என்ற விஷயத்தை நான்தெரிவித்துக்கொள்கிறேன். அப்படி இருந்தும் "மெஜாரிடி டிரனி" என்று உயர்ந்த, பரந்த நோக்கம் காரணமாக, நம்முடைய சகோதரர்களையும் சேர்தது நம்முடன் அழைத்துச் செல்லவேண்டுமென்ற சமரச உணர்ச்சி காரணமாக, சர்வ கட்சிக் கூட்டத்தில் கல்வி சம்பந்தமான விஷயம் வந்த காலத்தில் எட்டாவது வகுப்புக்கு மேல் இந்தியை பாடமாக்க வேண்டுமென்பதை அவர்கள் ஒரு சமரச முடிவாக ஏற்றுக்கொண்டதை நான் வரவேற்றுகிறேன். அதனால் என்ன நிலைமை இப்போது ஏற்பட்டிருக்கிறது ?

**Sri A. GOVINDASAMY** : "ஆன் எ பாயின்ட் ஆப் க்ளாரிபிகேஷன்."

**Mr. SPEAKER** : The hon. Member cannot raise on a point of clarification. He can raise a point of order. "க்ளாரிபிகேஷன்" எல்லாம் பிறகு சொல்லிக் கொள்ளுங்கள்.

**Sri C. N. ANNADURAI** : கமிட்டியில் செய்த முடிவைப்பற்றித் தவறான கருத்தை வெளியிடுவது........

**Mr. SPEAKER** : நீங்கள் பேசும்போது பதில் சொல்லவும். கமிட்டியில் சொல்லப்பட்ட கருத்து என்ன என்று எனக்கு எப்படித் தெரியும் ?

**Sri A. GOVINDASAMY** : "ஆன் எ பாயின்ட் ஆப் ஆர்டர்". கமிட்டியில் சொல்லப்பட்ட கருத்துக்கள் ரகசியமாகப் பாதுகாக்கப்படும் என்று சொல்லப் படும்போது பகிரங்கமாக தவறான முறையில் இங்கே அந்தக் கருத்தை எடுத்துச் சொல்வது........

**Mr. SPEAKER** : என்ன கருத்து என்று அவர்களுக்குத் தெரியும். எனக்குத் தெரியாது.

**Sri A. VEDARATHNAM** : சர்வ கட்சிக் கூட்டத்தில் இந்தியை எந்த வகுப்பில் இருந்து துவக்குவது என்ற பிரச்னைதான் முக்கியமான பிரச்னையாக எடுத்துக் கொள்ளப்பட்டது அன்றைய கூட்டத்தில் எட்டாம் வகுப்பில் இருந்து அதைக் கட்டாயப் பாடமாக ஏற்றுக் கொள்ளவேண்டுமென்ற முடிவு செய்யப்பட்டது. எல்லாராலும் அங்கீகரிக்கப்பட்ட விஷயம் என்பதை மீண்டும் வலியுறுத்திக் கூறுகிறேன்.

ஆகவே, இப்போது என்ன பிரச்னை ஏற்பட்டிருக்கிறது என்றால் நம்முடைய அரசியல் சட்டத்தைத் திருத்தியமைக்க வேண்டுமா அல்லது நம்முடைய மதிப்புக்குரிய ஜனாதிபதி அவர்களும், நம்முடைய பிரதம மந்திரி அவர்களும் கொடுத்த வாக்குறுதி போதுமா அல்லது பாராளுமன்றத்தில் இதைப்பற்றி ஒரு சட்டம் கொண்டு வந்தால் போதுமா என்பதாகும். 1939-ம் ஆண்டிலே இந்தி கட்டாயம் என்ற திட்டம் அமுலுக்கு வந்த காலத்தில் நாம் அதை ஏற்றுக் கொண்டிருப்போமானால் இன்றைக்கு இந்த மாதிரிப் பிரச்னைகளைக் கிளப்ப வேண்டிய நிலைமை தமிழகத்திற்கு வந்திராது. ஏனைய மாகாணங்களைக் காட்டிலும் ஒரு படி முன்னதாக சென்னையானது இந்த இந்தி விஷயத்தில் மற்றவர்களுக்கு ஒருவழி காட்டியாகக்கூட இருந்திருக்கும் என்று சொன்னால் அது மிகையாகாது. எனினும் 1965-ம் ஆண்டுக்கு அப்பாலும் ஆங்கிலமும் தொடர்ந்து நம்முடைய தேசிய மொழிகளில் ஒன்றாக, பொது மொழிகளில் ஒன்றாக இருக்கலாம் என்பதை நம்முடைய மாகாண சர்க்கார் ஏற்றுக்கொண்டுவிட்டார்கள். மத்திய அரசாங்கமும் அதை ஏற்றுக்கொண்டுவிட்டது. ஆனால் இனி என்ன நெருக்கடி வரப்போகின்றது என்பதை நான் இங்கே குறிப்பிட விரும்புகிறேன். 1965-ம் ஆண்டுக்குப் பிறகு ஏனைய எல்லா மாகாணங்களும் இந்தியிலேயே செயலாற்றிக்கொண்டு வரும்போது, மத்திய அரசாங்கத்திலும் இந்தி நடைமுறையில் வரும்போது நம்முடைய மாகாணத்தில் மட்டும் ஆங்கிலத்தைக் கொண்டிருப்போமானால் மற்றவர்கள் பேசுவதை நாம் புரிந்து கொள்ளவும், நாம் பேசுவதை அவர்கள் புரிந்து

[Sri A. Vedarathnam] [5th September 1960

கொள்ளவும் வாய்ப்பு இராத நிலையைத்தான் நாம் உண்டாக்கிக்கொள்கிறோம் என்று நான் இந்த இடத்தில் எச்சரிக்க விரும்புகிறேன். ஏன் இப்படி ஆங்கிலம் நீடிக்க வேண்டுமென்று வற்புறுத்துகிறார்கள் என்று எனக்கு விளங்கவில்லை. ஆறும் வகுப்பில் இருந்து ஆங்கிலம் பள்ளிகளில் கற்றுக் கொடுத்து வந்தது. இனிமேல் ஐந்தாம் வகுப்பிலிருந்தே கற்றுக்கொடுப்பதாக முடிவு செய்திருக்கிறார்கள். மேலும், நான்காம் வகுப்பில் இருந்தே துவக்க வேண்டுமென்ற யோசனையும் இருந்து கொண்டிருக்கிறது. இவ்வாறு கீழ் வகுப்புகளில் இருந்து இந்த ஆங்கிலத்தைக் கற்றுக் கொடுப்பதன் காரணம் அந்த மொழி கற்றுக்கொள்வதற்கு அவ்வளவு கடினமாக இருப்பதுதான். முதல் வகுப்பில் இருந்தே ஆங்கிலம் கற்றுக் கொடுக்கப்பட்டாலும் அந்தக் கஷ்டம் நிங்கப் போவதில்லை. இதற்கு முன் இந்த அவையில் நிதியமைச்சர் அவர்கள் அளித்த ஒரு குறிப்பை நினைவுபடுத்திப் பார்த்தால், பரிட்சையில் பெரும்பாலும் தவறக் கூடிய மாணவர்களில் 100-க்கு 90 பேர் ஆங்கிலத்தில்தான் தவறியிருக்கிறார்கள் என்ற உண்மை தெரிய வருகிறது. அதிலும் பிற்போக்கான வகுப்பைச் சேர்ந்தவர்கள், கல்வி வசதி பெறாத சமூகத்தினர் பெரும்பாலும் ஆங்கிலத்தில் மிகக் குறைவான எண்ணிக்கையே பெறுகிறார்கள். இதற்கு மாறாக இந்தியை எடுத்துக் கொண்டால் எட்டாம் வகுப்பில் இருந்து கற்றுக் கொடுப்பது என்ற முறையிலே வந்திருப்பினும்கூட, ஒன்றும் வகுப்பில் இருந்து ஆங்கிலம் கற்றுக் கொள்கிறவர்கள் அந்த மொழியில் எவ்வளவு திறமை பெற்றிருக்கிறார்களோ அதைக் காட்டிலும் அதிகத் திறமையைப் பெற்று விடமுடியும் என்று குறிப்பிட விரும்புகிறேன் இந்தி அவ்வளவு சுலபமான மொழி. தமிழைக் காட்டிலும் சுலபமாகக் கற்றுக் கொள்ளக்கூடிய மொழி என்று கூடக் குறிப்பிட விரும்புகிறேன். விஷாரத், ப்ரவீண் போன்ற உயர்ந்த பரிட்சைகளைக் காட்டிலும் பராங்கத் என்ற ஒரு பரிட்சை 7, 8 வருஷ காலமாக நடைபெற்று வருகிறது. அகில இந்தியாவிலே ஹிந்தியைத் தாய் மொழியாகக் கொண்டவர்கள்கூட, ப்ரசாரக், ப்ரவீண் தேறியவர்கள்தான் ஆந்திராவிலே பரங்கத் பரிட்சைக்கு வருகிறார்கள். ஏழு, எட்டு ஆண்டுகளாக அகில இந்தியாவிலும் முதன்மையாகத் தேறி வருகின்ற மாணவன் யார் என்று பார்த்தால் நம்முடைய தமிழன் என்ற விஷயத்தைக் குறிப்பிட விரும்புகிறேன். கடந்த ஆண்டு குடியாத்தத்தில் ஒரு கைத்தறி நெசவாளர் அகில இந்தியாவிலும் இந்தப் பரிட்சையில் முதன்மையாகத் தேறிவந்திருக்கிறார் என்று சொன்னால், அறிஞர் அண்ணா அவர்களுக்கு நான் கூற விரும்புகிறேன்—அவர்கள் எம். ஏ. முதல் வகுப்பிலே பாஸ் பண்ணினவர்கள்; மொழியிலே அவர்களுக்கு இருக்கும் திறமை நன்றாகத் தெரியும். இரண்டு ஆண்டுகள் ஹிந்தியைக் கற்றுக்கொள்ள அவர்கள் முன் வருவார்களானால், வட நாட்டிலே இருக்கும் அன்பர்களிடத்திலே அவர்களுக்கு இருக்கும் வெறுப்பை நீக்கி, அவர்களுடைய ஹிந்தி மொழித் திறமையை அங்கு காட்டுவார்களானால் வட நாட்டில் பல லட்சக்கணக்கான தொண்டர்கள் சிஷ்யர்களாக அவர்களுக்கு வருவார்கள் என்ற விஷயத்தை நான் அவர்களுக்கு நினைவூட்டுகிறேன். எனவே இந்த மொழியிலே இருக்கும் வெறுப்பை அவர்கள் மாற்றி, வட நாடு தென்னாடு என்ற வேற்றுமையை அவர்கள் நீக்கிவிட்டு, கொஞ்சம் அக்கறை எடுத்துக்கொண்டு ஹிந்தியைக் கற்றுக்கொள்வதற்கு அவர்கள் முன் வருவார்களானால் தென்னாட்டிலே மட்டு மல்ல, வட நாட்டிலும் பல சிஷ்யர்கள் அவர்களுக்கு நிரம்பச் சேருவார்கள் என்ற விஷயத்தை அவர்களுக்குக்கூறி, ஹிந்திக்கு இன்றைக்கு நம்முடைய மாநில சர்க்கார் கொடுக்கும் மாற்றாந்தாய் உபசரணையை விட்டுவிட்டு, ஆங்கில மொழிக்கு என்ன உரிமை, என்ன ஸ்தானம் அளிக்கப்பட்டிருக்கிறதோ அதைக் காட்டிலும் அதிகம் இல்லாமற் போனாலும், ஆங்கில மொழியைப் பயிலுவதற்குப் பள்ளிக்கூடங்களில் என்ன வசதி ஏற்படுத்தப்பட்டிருக்கிறதோ அதையாவது குறைந்தபட்சம் ஹிந்திக்கும் கொடுக்கவேண்டும். என்றைக்கு இருந்தாலும் ஆங்கிலத்தை இந்த நாட்டில் தாய்மொழியாகக் கொண்டவர்கள் ஒரு சதவிகிதம் கூட இல்லை. அப்படியிருக்கும்போது, அந்த மொழி இந்த நாட்டில் எந்தக் காலத்திலும் நிலைக்கப் போவதில்லை. இன்றைக்கு ஆங்கில பட்டதாரிகளாகச் சிறந்து விளங்குகிறவர்கள் தலைமுறை இருக்கும் வரையில்தான் இருக்குமே அல்லாமல், அதற்கப்பால் இந்த நாட்டின் பொது மொழியாக

5th September 1960] [Sri A. Vedarathnam]

ஹிந்திதான் திகழப் போகிறது. வருங்காலத்திலே என்றைக்காகிலும் மத்திய அரசாங்கத்திலே எல்லாத் துறையிலும் எல்லா வகையிலும் ஹிந்தி முதன்மை ஸ்தானம் வகிக்கும். ஆங்கிலத்திலே திறமையாகப் படித்து முதன்மை ஸ்தானம் வகிக்கும் தமிழகம் ஹிந்தி வரும் நேரத்தில் பின்னணிக்குத் தள்ளிவிடக்கூடாது என்ற விஷயத்தையும் இங்கே வற்புறுத்த விரும்புகிறேன். அப்போது கவர்னராக இருந்த திரு பட்டாபி சீதாராமையா அவர்கள் குறிப்பிட்ட வாக்கியத்தை நான் இங்கே குறிப்பிட விரும்புகிறேன். (இத் தருணத்தில் சபாநாயகர் மணி அடித்து அடுத்த கனம் அங்கத்தினரைப் பேசுமாறு கூப்பிட்டார்.)

* **Sri K. ANBAZHAGAN** : சட்ட மன்றத் தலைவர் அவர்களே, சென்னை அரசாங்கம் இன்றைய தினம் பின்பற்றி வருகின்ற, அல்லது மேற்கொள்ள இருக்கிற இரு மொழிக் கொள்கையை யொட்டி தமிழகத்திலே ஏற்படக் கூடிய சூழ் நிலையையும், மத்திய அரசாங்கம் மேற்கொள்ள வேண்டிய நடவடிக்கையையும் எடுத்து வைப்பதற்கான முறையில் இந்த விவாதத்தில் பங்கு கொள்வதற்கான வாய்ப்பு பெற்றதற்கு நான் மகிழ்கின்றேன்.

1958-ம் ஆண்டு மார்ச்சு மாதம் 10, 11 நாட்களில் இந்தச் சட்ட மன்றத்தில் நடைபெற்ற விவாதத்தில் இந்த அரசாங்கத்தினுடைய இரு மொழிக் கொள்கை ஏற்றுக்கொள்ளப்பட்டிருந்தபோதிலும், அந்த இரு மொழிக் கொள்கையினால் ஏற்படவேண்டிய முழுப் பலனும் ஏற்படவில்லை என்று பல்வேறு உறுப்பினர்கள் சட்ட மன்றத்தில் விளக்கிப் பேசியிருக்கிறார்கள்.

இரு மொழிக் கொள்கை என்பதை சென்னை அரசாங்கம் டில்லி சர்க்காருக்கு எடுத்துச் சொன்ன காரணத்தால் பெருமைப்பட இடம் இருக்கிறது என்பதை அமைச்சர் அவர்களும் இதை ஆதரிப்பவர்களும் எடுத்து காட்டுவதைப் போலத்தான், நானும் குறிப்பாகத் தெரிவிக்க விரும்புகிறேன். இரு மொழி கொள்கையை ஏற்றுக்கொண்டு வற்புறுத்த வேண்டிய சூழ் நிலையை உண்டாக்கிய பெருமை திராவிட முனேற்றக் கழகத்திற்கு, சென்னை அரசாங்கத்தைப் பொறுத்த வரையில் நிச்சயமாக உண்டு. அதேபோன்று டில்லி சர்க்காரிலே அமர்ந்திருக்கும் பெரிய தலைவர்கள் குறிப்பாக இதை ஏற்றுக்கொண்டு, இந்த முடிவை ஒத்துக்கொள்வதாகத் தெரிவிக்க வேண்டிய சூழ்நிலையை உண்டாக்கியதிலேயும் முன்னேற்ற கழகத்திற்குப் பெருமை இருக்கிறது.

முன்னேற்றக் கழகத்திற்கு இதில் பெருமைக்கு இடம் இருக்கும் காரணத்தால்தான் என்று நான் கருதுகிறேன், நிதி அமைச்சர் அவர்கள் இந்தச் சட்டப் பேரவையில் பேசும்போது, 'முன்னேற்றக் கழகத்தாரின் கருத்துக்களை வரவேற்கிறேன்; அவர்களுடைய ஆலோசனையை விரும்புகிறேன்' என்று தெரிவித்தார்கள். மேல் சபையிலே பேசும்போது நிதி அமைச்சர் அவர்கள், திராவிட முன்னேற்றக் கழகத்தார் இந்த மொழிப் பிரச்சினையில் தலையிடாமல் இருப்பார்களானால் எனக்குச் சற்று நிம்மதியாக இருக்கும்; திராவிட நாடு பிரிய வேண்டுமென்ற கொள்கையை உடையவர்கள் மொழிப் பிரச்சினையில் தலையிடுவதற்கு என்ன அவசியம் இருக்கிறது? என்ற கருத்தை அவர்கள் தெரிவித்திருக்கிறார்கள். இருந்தாலும் மேல் சபையிலே பேசும்போது, திராவிட முன்னேற்றக் கழக உறுப்பினராக ஒருவர் மட்டுமே அவர் கண்ணுக்குத் தெரிந்ததால்தான் அப்படிப் பேசியிருப்பார் என்று எண்ணுகிறேன். ஆனால், இங்கே 15 பேர்கள் இருக்கும் காரணத்தால் போலும், அவர்கள் இங்கே 'உங்களுடைய ஆலோசனையை வரவேற்கிறோம், என்று சொல்லியிருக்கிறார். அமைச்சர் வரவேற்றாலும்' வரவேற்காவிட்டாலும் சில நேரத்திலே மக்களுடைய தேவையான பிரச்சினையை எடுத்துச் சொல்ல வேண்டிய கடமை எங்களுக்கு இருக்கிறது.

அமைச்சர் அவர்கள் வரவேற்பதற்காக மட்டும்தான் எங்களுடைய கருத்தைச் சொல்வதென்றால் திராவிட முன்னேற்றக் கழகத்தார் சட்ட மன்றத்திற்கு வந்திருக்கவே கூடத் தேவையில்லை. ஆனால், நாங்கள் சொல்வதை அமைச்சருடைய உள்ளம் அப்படியே ஏற்றுக்கொள்ளுமா என்றால்,

அமைச்சருக்கு ஏற்பட்டிருக்கும் இக்கட்டான நிலைமையில் அடிப்படையில் அச்சத்திற்கு ஆட்பட்டு தயவு தாட்சண்யத்திற்கு உட்பட்டு, டில்லி சர்க்காருக்கு நல்ல பிள்ளைகளாக நடந்து தமிழ் நாட்டிலே தலை தப்ப விரும்பும் நிலையில்—ஏற்றுக்கொள்ளமுடியாது. அதனால்தான் அமைச்சர் அவர்கள் இருமொழிக் கொள்கை என்று எடுத்துச் சொன்னாலும், வடவரின் இந்திக்கு மட்டும் ஏற்பட்டு வரும் செல்வாக்கையும், இந்திக்கு ஊட்டப்பட்டு வரும் வலுவையும் தடுத்து நிறுத்த அமைச்சர் அவர்கள் இதுவரையில் தம்முடைய அரசாங்கத்தின் சார்பிலே சுண்டுவிரலைக்கூட அசைக்கவில்லை. வேண்டுமானால் சர்தார் வேதரத்னம் போன்றவர், அந்தக் காலத்து தேசிய வாதியாக உள்ளவருக்கு இன்று அமைச்சர் அவர்கள் மேற்கொண்டிருக்கும் கொள்கையில் ஏதோ ஒரு புதுமை மாற்றம் இருப்பதாகத் தெரியலாமே தவிர, என்னைப் போன்றவர்கள் கருத்தில், திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சார்ந்தவர்கள் கருத்தில், முன்னேற்றக் கழகம் எடுத்துச் சொல்லும் அந்தக் கொள்கை வழியில் ஓரளவுதானே அமைச்சர் அவர்கள் வந்திருக்கிறார்கள். இது எப்படிப் பயன்தரும்? என்ற எண்ணமே தோன்றுகிறது. தி. மு. க. கொள்கையை ஏற்று முடிவு வரையில் அவர்கள் நடப்பார்களானால் நிச்சயமாகத் தமிழ் மக்களுடைய உரிமையைப் பாதுகாக்க முடியும் என்று நான் தெரிவிக்க விரும்புகிறேன். ஆனால், அதைவிட முக்கியமாகத் தெரிவிப்பேன்—திராவிட நாடு திராவிடருக்கே என்று சொல்லும் விடுதலைக் கொள்கை உடைய எங்களுக்குத்தான் மொழிப் பிரச்சினை மூலப் பிரச்சினையாக இருக்கிறது. அகில இந்தியா என்று பேசுகிறவர்களுக்கு, யூனியன் சர்க்காருக்கு உட்பட்டு ஆட்சி நடத்த வேண்டுமென ஆசைப்படுகிறவர்களுக்கு, எப்படியாவது மந்திரி பதவி நிலைத்தால் போதும் என்று நினைக்கிறவர்களுக்கு மொழிக் கொள்கை மூலம் அல்ல, மொழி மக்களுக்குத் தேவைப்படுகிற காரணத்தால், அந்த மொழியிலே மக்கள் பற்றும் அக்கறையும் கொண்டுவிட்ட காரணத்தால், மக்களிடத்திலே வாக்குகள் இருக்கிற காரணத்தால், அந்த வாக்கைப் பெறும் வாய்ப்பு தவறிவிடக்கூடாது என்ற உணர்ச்சியின் காரணத்தால், அமைச்சர் அவர்கள் தமிழுக்காகப் பல நேரங்களில் வாதாடிப் பேசுகிறார். இருந்தாலும், தமிழுக்குக் கிடைக்கவேண்டிய பாதுகாப்பையும் உயர்வையும் அவர் தேடத் தவறியிருக்கிறார் என்று தெரிவிக்க விரும்புகிறேன்.

உண்மையாகவே, அரசியல் சட்டத்தைத் திருத்தாமல் இரு மொழி ஏற்பாட்டிற்குப் பாதுகாப்புத் தேடலாம் என்று சொல்வது வீட்டுக் கதவுக்குப் பூட்டு போடாமலே கூட, யாராவது திண்ணையில் விழித்திருந்து திருடிக்கொண்டு போகாமல் பார்த்துக்கொள்ளலாம் என்பதைப் போல் இருக்கிறது. அமைச்சர் அவர்களுக்குப் பூட்டுப் போடும் தெளிவு ஏற்படாத சூழ்நிலை இருப்பதைக் காண வருத்தப்படுகிறேன். உண்மையிலேயே அரசியல் சட்டம் ஏற்படுத்தப்பட்ட நேரத்தில், எந்தச் சூழ்நிலையில் ஏற்பட்டது என்பதைப் பார்த்தால் அதிலே உருவான விதிகளும் பகுதிகளும் எந்த நோக்கத்தோடு உருவாக்கப்பட்டன என்பது விளங்கும். இன்றைய தினம் அதே அரசியல் சட்டத்தை வைத்துக்கொண்டு, அந்தக் குறிப்புகளை வைத்துக்கொண்டு, அதைச் சிறிதளவு கூட மாற்றாமல் திருத்தாமல், இந்த ஏற்பாட்டிற்குப் பாதுகாப்புத் தேட முடியுமா என்றால் நிச்சயமாக முடியாது. அல்லது தற்போது முடிந்தாலும் நீண்ட காலம் நிலைக்காது என்ற உண்மை தெளிவுபடும்.

உண்மையாகவே அகில இந்திய தேசீய வாதிகள் அரசியல் சட்டத்தை உருவாக்கிய நேரத்தில், இந்தி ஒன்று தான் தேசீய மொழி என்ற தவறான நினைப்பில் நிலைத்து நின்றார்கள். ஆனால், நாளாவட்டத்தில் ஏற்பட்ட உண்மை விளக்கத்தால்தான், இந்தி ஆட்சி மொழி மட்டுந்தான், தேசீய மொழி அல்ல, தேசீய மொழிகள் பல இருக்கின்றன. அதிலே ஒரு சிறப்பான இடத்தை இந்திக்கு தேட பார்க்கலாம் என்ற கருத்தும் தெளிவும் தேசீயவாதிகட்கு ஏற்பட்டது. ஆனால், அரசியல் சட்டம் உருவான நேரத்தில் இந்திதான் தேசீய மொழி என்ற உணர்ச்சி இருந்த காரணத்தால், பிற மொழியை அதற்குச் ஈடாக மதிக்காத காரணத்தால்,

5th September 1960] [Sri K. Anbazhagan]

தேசியவாதியாக உள்ள சர்தார் வேதரத்னம் அவர்கள் இன்றைய தினம் கூட இந்திக்கு முதல் இடம் இருக்கவேண்டுமென்று சொல்லுவது போன்ற அந்த உணர்ச்சி தடித்திருந்த காரணத்தால், அவர்கள் அரசியல் சட்டத்தை உருவாக்கியபோது, உண்மையாகவே இந்திக்கு எந்த எந்த தனிச் சிறப்பையும் ஆதிக்க நிலையும் உண்டாக்க முடியுமோ அவற்றை உண்டாக்கினார்கள். ஆனால், அன்றுங்கூட எதிர்ப்பு ஏற்படாமல் இல்லை. கோவை டி.எ. இராமலிங்கம் செட்டியார் போன்ற பெரியவர்கள் அப்பொழுதும் இந்திக்குத் தரப்படும் முதல் இடத்தை மறுத்தார். இந்திக்கு 'முதல் இடத்தை தர மறுத்தது, இரண்டாவது இடம் பிற மொழிக்குக் கிடைத்தால் போதாதா என்ற முறையில் மறுக்க முடிந்ததே தவிர, 'முதல் இடம் இந்திக்கு எதற்காக?' என்று மறுக்க முடியவில்லை.

ஆகையால்தான், அரசியம் சட்டம் 1950-ம் ஆண்டில் தோன்றியபோது, 1965-ம் ஆண்டிலே "தேவ நாகரியில் எழுதப்படும் இந்தி இந்த நாட்டின் ஆட்சி மொழி" என்று சாசனம் ஆக்கப்பட்டது. சாசனம் ஆக்கிவிட்டுத்தான் அந்தத்தனி உரிமையை இந்திக்காரர்கள் எடுத்துக்கொண்டுதான், இந்தி மொழி அல்லாத பிற மொழி பேசுபவர்களின் உரிமையை ஒதுக்கி வைத்தான், பிற மொழி பேசும் மக்களுடைய எதிர்ப்பைச் சமாளிக்க இந்தி பேசாத மக்களுடைய விருப்பத்தை ஓரளவு நிறைவேற்றுவதாகக் காட்டிக் கொள்ள 1965-வது ஆண்டுக்குப் பின்னரும் தேவைப்பட்டால் ஆங்கிலத்தை நீடிக்க வழி செய்யலாம், முறை வகுக்கலாம் என்று விதி செய்தார்கள். ஆங்கிலத்திற்கும் இடம் வைத்திருக்கிறார்கள் என்றால் அது ஆங்கில நாட்டிலே இருக்கும் ஆங்கிலேயருக்குகாகத் தந்த இடம் அல்ல; இந்த நாட்டிலேயே ஆங்கில மொழி விற்பன்னராக, மேதைகளாகப் பலர் இருக்கிறார்களே அவர்களுக்காகத் தந்த இடமும் அல்ல; ஆங்கிலத்தையே குடும்ப மொழியாகக் கொண்டிருக்கிறார்களே அவர்களுக்காகத் தந்த இடமும் அல்ல; ஆனால் இந்தி பேசாத மக்கள் நல்ல வகையில் அரசாங்கத்தில் பங்கு கொள்ள வேண்டுமானால், பங்குகொள்ள ஆங்கிலத்தைத் தவிர வேறு வழியோ மொழியோ இல்லாததால்தான் பிற மொழி மக்கள் உரிமைக் குரலை எழுப்ப வேறு வழி இல்லை. தமிழில் எழுப்பினால் டில்லி சர்க்கார் காது கொடுக்காது; தெலுங்கில் எழுப்பினாலும் டில்லி சர்க்கார் செவி சாய்க்காது; வங்கத்தில் எழுப்பினாலுங் கூட அதற்கு முறையான, தகுதியான இடம் கிடைக்காது. அதுபோலவேதான் பிற மொழி பேசுபவர் எவரும் தங்களுடைய உரிமைக் குரலை எழுப்ப வேண்டுமானால், அதற்கு ஆங்கிலந் தவிர வேறு வழியில்லை என்ற நிலைமை ஏற்பட்டபோது உரிமை என்ற காரணத்தால் கூட அல்ல, "கன்ஸெஷன்" விட்டுக்கொடுப்பது என்ற வகையில், கொஞ்சம் இடம் தரலாம் என்ற நோக்கத்தோடு தேவைப்படின் ஆங்கிலத்திற்கு இடம் அளிக்கலாம் என்று விதி செய்தனர். இப்படி இடமளித்திருக்கும் ஆங்கிலத்தின் நிலைமை இன்றைய தினம் எப்படி மாறி இருக்கிறது? 1965-க்குப் பின்னால் ஆங்கிலத்திற்கு அவசியமில்லை என்ற நோக்கத்துடன் 1965-க்கு முன்னால் கூட சந்தர்ப்பம் கிடைத்தால் மற்ற இந்திய மக்கள் ஏமாந் துவிட்டால்; இந்திபேசாத மக்களுக்கு எதிர்ப்பு உணர்ச்சி ஏற்படாவிட்டால், கண்டிபபதறகாக கறுப்புக் கொடி காட்டப்படும் என்ற நிலை ஏற்படாவிட்டால், அப்படிப்பட்ட எதிர்ப்பு வளராவிட்டால், நிச்சயமாக ஆங்கிலத்தை அதனுடைய இடத்தை விட்டுக் கொஞ்சம் கொஞ்சமாக ஒதுக்கி இந்தியை உயர்த்தி விடலாம் என்ற முறையிலே அரசியல் சட்டம் அமைந்திருக்கிறது.

கனம் அமைச்சர் சுப்பிரமணியம் அவர்கள் அரசியல் சட்டத்தில் பாதுகாப்பு இருக்கிறது என்று சொன்னார்கள். நான் சொல்லுகிறேன், இந்த அரசியல் சட்டத்தின் விதியில் சதி இருக்கிறது, சூழ்ச்சி இருக்கிறது. அரசியல் சட்டத்தில் பிற மொழிகளை ஒதுக்கித் தள்ளுவதற்கு வழி வகைகள் அத்தனையும் இருக்கின்றன. பிற மொழிகளுக்கு எங்கே இடம் இருக்கிறது? அந்தந்த மாகாண அளவில் மாநில அரசில் பிற மொழிகள் இருக்கலாம் என்று சொல்லுவது நமக்கு அவர்கள் தரவேண்டிய உரிமை அல்ல. மாறாக மத்திய சர்க்காரில் நம்முடைய தமிழுக்கு என்ன இடம் கொடுக்கப்பட்டிருக்கிறது. டெல்லி அரசில் ஆந்திர மக்களுடைய தெலுங்குக்கு என்ன

[Sri K. Anbazhagan] [5th September 1960

இடம் கொடுக்கப்பட்டிருக்கிறது? தெலுங்கிற்கு, தமிழுக்கு இடம் இல்லை, 14 தேசிய மொழிகளுக்கும் இடம் இல்லை என்று சொன்னால், அந்தந்த மக்களுடைய விருப்பத்தை நிறை வேற்றுவதற்கு என்ன வழி இருக்கிறது என்று எண்ணிப்பார்த்துதான் இவ்வாறு செய்தார்களா என்றால், எண்ணிப்பார்க்க வில்லை என்றே கூறவேண்டும். ஆகவேதான் நான் குறிப்பிட்டுச் சொல்லுவேன், தேசிய மொழி இந்தி ஒன்றே என்ற கருத்து இருந்த நேரத்தில் கொண்டு வரப்பட்ட இந்த அரசியல் சட்டம்—இதனுடைய ஒவ்வொரு பிரிவுங்கூட விளக்கிக்காட்ட முடியும் என்ற நம்பிக்கை எனக்கு இருப்பதாலேயே சொல்லுகிறேன்—ஒவ்வொரு பிரிவும் இந்திக்குச் சார்பாக, பிற மொழிகளுக்கு உரிமை இல்லாமல், அவர்கட்கு தேவைப் பட்டால் மட்டும் ஆங்கிலத்தைப் பயன்படுத்த இடம் வைத்துச் செய்யப் பட்டுள்ளது. தேவைப்பட்டால் பயன் படுத்தலாம் என்ற விதியின்படி, ஆங்கிலத்தைப் பயன்படுத்த இந்திக்காரர்களுக்கு என்ன அவசியம்? நமக்குத்தான் ஆங்கிலம் தேவைப்படுகிறது. இந்தி ஆட்சி மொழியாக ஏற்கப்பட்டுள்ள சூழ்நிலையில் இந்திக்காரர்களுக்கு பிற மொழி தேவை இருக்காது. ஆனால், ஒரு வேளை இன்றைய தினம் இந்தி மொழி வளம் பெறுமல் இருக்கிற காரணத்தினால், இந்தியிலே செவ்வையாக ஆட்சி நடத்தமுடியாது என்பது இந்தி வெறியர்களுக்கு தெளிவாகத் தெரிந்திருக்கக்கூடும். இந்தியாவிலே வழங்கி வளர்கின்ற மொழிகளை எடுத்துக்கொண்டால் பண்டித நேரு அவர்கள் சொல்லியது போல, தமிழைப் போல, கூர்ஜரத்தைப் போல, மராத்தியைப் போல, வங்கத்தைப் போல, இந்தி வளராத காரணத்தினால், வளரும் ஆற்றல் பெறுத காரணத்தினால், வளர்ப்பதற்குப் பல இடையூறுகள் இருக்கின்ற காரணத்தினால், அப்படிப்பட்ட இந்தி மொழியிலே நேரடியாக ஆட்சி நடத்த முடியாது என்பதை எண்ணி தங்களுடைய ஆட்சி வசதிகளுக்காகக்கூட ஆங்கிலத்தை ஏற்றுக்கொள்ள வேண்டிய நிலைமை ஏற்பட்டிருக்கலாம். அப்படி ஆங்கிலத்தை ஏற்றுக்கொள்ள வேண்டிய நிலைமை கட்டாயம் ஏற்பட்டிருக்கிறதே தவிர, ஆங்கிலத்தை ஏற்பதன் மூலம் பிற மொழி மக்களுக்கு நம்பிக்கை உண்டாக்கக்கூடிய அளவுக்கு, அவர்கள் உரிமையை உறுதிப்படுத்துகிற நிலை இன்னும் ஏற்படவில்லை.

பண்டித நேரு அவர்கள் தந்திருக்கிற உறுதி மொழியை நம்பித்தான் ஆக வேண்டும். அவர்களிடத்தில் நம்பிக்கை வைத்துத்தான் மேலும் நம்முடைய உரிமையைப் பாதுகாத்துக்கொள்ள வேண்டும் என்று அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். பண்டித நேரு அவர்கள் நெடுநாள் வாழ வேண்டுமென்று தான் நான் ஆசைப்படுகிறேன். ஆனால், பண்டித நேருவுக்குப் பின்னால், அல்லது பண்டித நேருவின் காலத்திலேயே அவரது ஜனநாயக மனப்பான்மையில் பற்று இல்லாதவர்களின் ஆதிக்கம் வலுக்குமேயானால், இன்னும் 15 ஆண்டுகளுக்குப் பிறகோ, 20 ஆண்டுகளுக்கு பிறகோ கூட ஏன் இந்தி வரக்கூடாது என்று நினைப்பவர்கள் ஆட்சிக்கு வருவார்களேயானால், அல்லது இந்தி மொழிக்கு வாதிடுபவர்கள், இந்தியைத் திணிப்பதற்கு முயற்சி செய்தவர்கள், மொழிக் குழுவில் அமர்ந்து இந்திக்கு—அதன் ஆதிக்கத்துக்கு வாதாடியிருக்கிறார்களே அப்படிப்பட்டவர்களுக்கு அரசியல் செல்வாக்கு கிடைக்குமானால், அந்த நேரத்தில் இந்தி பேசாத மக்களின் நிலைமை என்ன என்பதை எண்ணிப் பார்க்கவேண்டும். பண்டித நேரு அவர்கள் இதற்குத் தேவையான சட்டம் செய்ய, பாராளுமன்றத்தில் நடவடிக்கைச் சட்டம் கொண்டு வருவதாக சொல்லியிருக்கிறார். அப்படி நடவடிக்கைக்காகக் கொண்டு வரப்படக்கூடிய சட்டம் முழுப் பாதுகாப்பு ஆகாது. அப்படிப்பட்ட சட்டம் வருகிற போது பாராளுமன்றத்தில் தற்காலிகமாக ஆங்கிலம் நீடிக்கப்படவேண்டும். இன்னும் 10, 15 ஆண்டுகளுக்கு ஆங்கிலத்தை நீடிப்போம், அல்லது இன்னும் 25 ஆண்டுகளுக்கு நீடித்தால் போதும் என்று வரையறைகள் வகுக்கப்படலாம். அப்படி வரையறைகள் ஏற்படுகின்ற அளவுக்குப் பிற மொழி மக்களின் உரிமையைக் குறைப்பதாகத் தான் இருக்கும். ஆகவேதான், இந்த அரசியல் சட்டத்தின் ஆட்சி மொழிப் பிரிவில் காணப்படுகிற முதல் தொடரே மாற்றி அமைக்கப்பட வேண்டும் என்று திராவிட முன்னேற்றக் கழகத்தாராகிய நாங்கள் விரும்புகின்றோம்.

5th September 1960] [Sri K. Anbazhagan]

The official language of the Union shall be Hindi in Devanagari script.

என்பதே—அந்த விதி.

தேவநாகரி எழுத்துக்களைக்கொண்ட இந்தி மொழிதான் இந்தியாவின் ஆட்சி மொழியாக இருக்கவேண்டும் என்று முதலிலே கூறப்பட்டிருக்கிறது. அதற்குப் பின்னரே 15 வருஷங்களுக்கு ஆங்கிலம் தொடர்ந்து ஆட்சி மொழியாக இருக்கும் என்று கூறப்பட்டிருக்கிறது. அது நம்முடைய உரிமையைப் பாதுகாப்பது ஆகாது. இந்த தேசத்திலுள்ள வேறு சில கட்சியைச் சேர்ந்த நண்பர்கள் ஆங்கிலததிற்காகத்தான் நாங்கள் வாதாடுகிறோம் என்று தவறுதலாக நினைக்கக்கூடும். தாய் மொழியை மறந்து ஆங்கிலந்தான் இருக்கவேண்டுமென்று கோருகிறவர்கள் நாங்கள் அல்ல. திராவிட முன்னேற்றக் கழகத்தினர் அல்ல. எங்களுடைய தமிழுக்குக் கிடைக்கவேண்டிய இடம் கிடைத்துவிட்டால், இந்தி அல்லாத பிற மொழிகளுக்குக் கிடைக்க வேண்டிய இடம் கிடைத்து விட்டால், இந்தியைப் பயன்படுத்துவதன் காரணமாக நம்முடைய உரிமை ஒரு சிறிதும் பாதிக்கப்படாது என்ற சூழ்நிலை ஏற்படுமேயானால், அந்தச் சூழ்நிலை ஏற்படுகின்ற அளவுக்கு பிற மொழி மக்களுடைய உரிமை தடைப்படாமல் இருக்குமேயானால், அந்த நேரத்தில் ஆங்கிலத்தை விலக்குவது பற்றி, அகற்றுவது பற்றி திராவிட முன்னேற்றக் கழகம் குறுக்கிடாது. இன்றைய தினம் ஆங்கிலத்தை அகற்றுவது, அல்லது அதனுடைய உபயோகத்தைக் குறைப்பது என்ற முறையில் கையாளப்படும்பொழுது, மத்திய அரசில் இந்திதான் அந்த இடத்தைப் பிடிக்கவேண்டும். இந்தி அந்த இடத்தை பிடிக்க பிடிக்க, பிற மொழி மக்களுடைய உரிமை பறிபோகிறது என்ற சூழநிலை இருக்கிற காரணத்தினால்தான் அரசியல் சட்டத்தின் முதல் பிரிவையே திருத்தியாகவேண்டுமென்று நான் வலியுறுத்திச் சொல்லுகிறேன். அது மட்டுமல்ல. முதல் பிரிவை திருத்தினால் மட்டும் போதாது. அதற்கு அடுத்து இருக்கிற பிரிவுகளில் என்ன கருத்து காணப்படுகின்றது. "இண்டர் நேஷனல் நியூமரல்ஸ்" உலகத்தில் பொதுவாகக் கையாளப்டுகின்ற எண்கள் பயன்படுத்தப்படவேண்டுமென்ற கருத்து ஒரு பிரிவில் இருக்கிறதே தவிர, அந்தக் கருத்தைப் புறக்கணிக்கும் வகையில் தேவநாகரி எண்களை பயன்படுத்துவதற்கு ஜனாதிபதி அனுமதி அளிக்கலாம் என்றும் விதி செய்துள்ளனர். இந்தி எண்கள் தமிழ் மக்களுக்கு மட்டும் புரியாதது அல்ல, இந்தியாவிலே பல்வேறு மொழிகளைப் பேசுகிறவர்களுக்கும் புரியாததாகும். அந்த எண்களைப் பயன்படுத்த விதி செய்திருப்பதும், அந்த எண்கள், அந்த இந்தி மொழி பேசும் மக்கள் உள்ள வட்டாரத்தில் வழங்க ஆரம்பித்திருப்பதும், நம்முடைய அமைச்சர் ஒருவர் சுற்றுப் பயணம் செய்யும்பொழுது அவைகளைப் பார்த்தும் புரிந்துகொள்ளக் கூடாத நிலைமை ஏற்பட்டிருப்பதும் இந்த துணை விதி என்ன நிலைமையை உண்டாக்குகிறது என்பதைத் தெளிவாகக் காட்டும். மாறாகத் தமிழ் வெறி நமக்கு இருக்குமானால், தமிழ் எண்களேதான் பயன்படுத்தப்பட வேண்டும் என்றுகூட நாம் கேட்க முடியும். ஆனால், அப்படிக் கேட்பது உலகத்தின் வளர்ச்சியோடு ஒட்டிச் செல்லுவதற்கு உகந்ததாக இல்லை என்ற காரணத்தினால்தான் திராவிட முன்னேற்றக் கழகத்தினர் எவ்வளவுதான் தமிழ்ப் பற்று வைத்திருந்தாலும், பொது நோக்கத்தை இழந்துவிடாமல் பொது எண்களையே ஏற்றுக் கொண்டுள்ளனர். இன்றைய தினம் இந்தி எண்கள் வழங்கப்படுவதற்குக்கூட வழியும், வாய்ப்பும் அரசியல் சட்டத்தில் இருக்கிறது. அதே நேரத்தில் ஆங்கிலம் ஆட்சி மொழியாக நிலைக்கும் என்ற கருத்து அரசியல் சட்டத்தில் இல்லை. ஆங்கில மொழி தேவையாயின் அந்த அளவுக்கு நீடிக்கப்படலாம் என்ற கருத்தே இருக்கிறது. அதைவிட முக்கியமாக எப்பொழுது வேண்டுமானாலும் ஆங்கிலத்தின் உபயோகத்தைக் குறைப்பதற்கு ஜனாதிபதிக்கு அதிகாரம் இருக்கிறது. நான் வற்புறுத்திச் சொல்வேன், அகில இந்திய மக்களின் நேரடியான பிரதிநிதிகள் கூடிப் பொது மக்களுடைய விருப்பத்தை அறிந்து அரசியல் சட்டம் உண்டாக்கப்படவில்லை. யார் யாரோ, ஏதோ சில காரணத்தினால் அந்த உயர்ந்த இடத்தில் அமர்த்தப்பட்டார்கள். அப்படிப்பட்டவர்களாலே தான் இந்த அரசியல் சட்டம் உருவாக்கப்பட்டது. எனவேதான் இன்று மாறுபாட்டுக்கு இடந்தருகிறது. மேலும் மொழிப் பிரச்னை ஒரு காலத்தில்

[Sri K. Anbazhagan] [5th September 1960

தீர்மானித்து முடித்துவிடக் கூடிய பிரச்னை அல்ல. மொழிப் பிரச்னை காலத்தையொட்டி மாறிக்கொண்டே இருக்கும். அது மட்டும் அல்ல. மொழியினால் வளர்ந்து வருகிற உணர்ச்சி காலத்தையொட்டி மாறிக்கொண்டே இருக்கும். 20 ஆண்டுகளுக்கு முன்பாக இருந்ததுபோலல்லாமல் இப்பொழுது தமிழ் எத்தனையோ துறைகளில் வளம் பெற்றிருக்கிறது. மக்களும் உணர்ச்சி பெற்றுள்ளனர். மக்களின் மொழிப்பற்று நாளும் வளர்கின்ற உணர்ச்சியாகும். மக்களின் மொழி உணர்ச்சி வளர்கின்ற காரணத்தினால் அந்த உணர்ச்சி இந்தியுடன் மோதிக்கொள்ளக்கூடாது என்று விரும்பினால், வளர்கின்ற உணர்ச்சிக்கு மதிப்பு அளிக்கவேண்டும். அரசியல் சட்டத்தைத் திருத்தி ஆங்கிலத்திற்கு நேரடியாக ஆட்சி மொழி உரிமை அளிக்கவேண்டும். பிறரிடத்தில் தயவு தாட்சண்யம் காட்டி ஆங்கிலத்திற்கு இடம் அளிப்பது என்பது பிற மொழி மக்களை ஏமாற்றப் பயன்படுமே தவிர, கிளர்ச்சிகளைத் தள்ளிவைக்கவும் கொந்தளிப்பை மூடி வைக்கவும் பயன்படுமே தவிர, உண்மையிலேயே பிற மொழி மக்களின் உரிமைகளை முழு அளவுக்குப் பாதுகாப்பதாகாது.

பண்டித நேரு அவர்கள் உறுதி மொழி அளித்திருப்பதை கனம் அமைச்சர் அவர்கள் சுட்டிக்காட்டினார்கள். பண்டித நேரு அவர்கள் ஆட்சிப் பீடத்தில் இருக்கிற காலத்திலேயே அந்த உறுதிமொழியைப் பாதுகாக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ளக்கூடாதா ? அரசியல் சட்டத்தை திருத்துவதிலே என்ன தவறு இருக்கிறது ? அரசியல் சட்டத்தைத் திருத்த முற்பட்டால் பண்டித நேரு அவர்களின் செல்வாக்கு பறந்துவிடுமா ? அல்லது இந்த விண்ணப்பத்தை கனம் சுப்பிரமணியம் அவர்கள் பண்டித நேரு அவர்களிடம் எடுத்துச் சொன்னால் இவருடைய பதவி தான் பறி போய் விடுமா ? அல்லது மதிப்புக் குறைந்துவிடுமா ? காங்கிரசு ஆட்சி குலைந்து விடுமா ? மாறாக அரசியல் சட்டத்தில் பாதுகாப்பு தேடப்படாவிட்டால், பொது மக்களின் ஐயப்பாடு நீங்காதாகையால் அமைச்சர் அவர்கள் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும், "திராவிட நாடு திராவிடருக்கே" ஆகின்ற நாள், விரைவாகவே வரும். அதை எவராலும் தடுத்து நிறுத்த முடியாது. இந்த நேரத்தில் அரசியல் சட்டம் திருத்தப்படாவிட்டால், பிற மொழி பேசுகின்ற மக்களுக்குப் பாதுகாப்பு தரப்படாவிட்டால், பொதுவாகவே நாட்டில் விடுதலை உணர்ச்சி மேலும் ஓங்கத்தான் செய்யுமே தவிர, குறைந்துவிடாது. அரசியல் சட்டம் திருத்தப்பட வேண்டும் என்று திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பில் முன்னரும் திருத்தத் தீர்மானம் கொடுத்தோம். இப்பொழுதும் திருத்தத் தீர்மானம் கொடுத்திருக்கிறோம். அதை அருள் கூர்ந்து அமைச்சர் அவர்கள் ஏற்றுக்கொண்டு மத்திய சர்க்காருக்கு எடுத்துச் சொல்ல வேண்டுமென்று கேட்டுக்கொண்டு, என்னுடைய உரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

**MR. SPEAKER :** பிஸினஸ் அட்வைஸரி கமிட்டி கூட்டத்தின் முடிவுகளைப் பற்றி இப்பொழுது சொல்லுகிறேன்.

## II.—ANNOUNCEMENTS—*cont.*

### (4) BUSINESS OF THE HOUSE.

The House will sit till the 12th September 1960.

On the 6th, 7th and 8th instant, the Draft Third Five-Year Plan of the Madras State will be taken up for discussion.

On the 9th, 10th and 12th instant, Official Bills will be discussed.

The Privilege matter which was raised by the hon. Member, Sri S. Lazar, will be taken up on the 7th September.

The notice under rule 41 by the hon. Member, Sri M. Kalyanasundaram, will be taken up on 8th September.